# வீரத்தியாகி விஸ்வநாததாஸ்



மு. செல்லப்பன் எம்.ஏ., எம்.எட்.,

# வீரத்தியாகி விஸ்வநாததாஸ்

## — வரலாறு —

ஆசிரியர்:
**மு. செல்லப்பன்** எம்.ஏ.,எம்.எட்.,

தியாகி விஸ்வநாததாஸ்
நற்பணி மன்றம் சார்பில்
வெளியிடப்படுகிறது:

வெளியிடுவோர்
**அ. சாரதா**
202/8, டி பிளாக் வீட்டுவசதி வாரியக் குடியிருப்பு
கோவில்பட்டி-628 501.

வீரத்தியாகி
விஸ்வநாததாஸ்
— வரலாறு —

Veera-thyagi
Viswanatha Dhas
— History —



ஆசிரியர்: மு. செல்லப்பன்
முத்துமாலை செல்லப்பன்

Author: **M. Chellappan**
Muthumaalai Chellappan

முதற் பதிப்பு 1996

First Edition 1996

பக்கங்கள் **86 + 22**
படப்பக்கங்கள் **10**
மொத்தப்பக்கங்கள் **118**
விலை ரூ. **25**/-

Pages **86 + 22**
Picture Page **10**
Total Pages **118**
Rate **25**/-

வெளியிடுவோர்:
அ. சாரதா
202/8, டி பிளாக்
வீட்டுவசதி வாரியக் குடியிருப்பு
கோவில்பட்டி-628 501.

Publisher
A. Saradha
202/8, D Block
Housing Board Colony
Kovilpatti-628 501.

---

அச்சிட்டோர்: நதிசத்திரா அச்சகம், கோவில்பட்டி.

# படையல்

| | |
|---|---|
| என்னைப் பாலூட்டித் | தள்ளாத வயதிலும் |
| தாலாட்டி | என்னைப் |
| வளர்த்த | பட்டதாரியாக்கி மகிழ்ந்த |
| என் அன்புத் தாய் | என்னருமைத் தந்தை |
| மு. கருப்பாயி அம்மாள் | ஐ. முத்துமாலை வைத்தியர் |



இவர்களுக்கு இந்நூலைப்
படைக்கின்றேன்.

## வாழ்த்துகிறார் நாடகத்துறைத் தலைவர்

நாடகமேடையில் விஸ்வநாததாசின் குலத்தை எண்ணிப் பல நடிகைகள் அவருடன் நடிக்க மறுத்து அவமானப்படுத்திய நிலையிலும் தன் கம்பீரமான குரலால் சுதந்திர வேட்கையை நாடகத்தின் மூலம் மக்கள் உள்ளங்களில் விதைத்த விஸ்வநாத தாஸ் பற்றித் தினமணி இதழ் 1995 ஜுன் 16-இல் திரு குமரிஅனந்தன் அவர்கள் எழுதிய 'விடுதலைக்கு இசையால் வேள்வி செய்த தாஸ்' கட்டுரையை வாசித்தபோது 'நாடகத்தை அரசியல் படுத்திய' விஸ்வநாததாஸ் பற்றிய ஆய்வொன்றை மேற்கொள்ள வேண்டுமென்கிற வேட்கை, பொங்குமாங்கடல் நீர்ச்சுழலைப்போல் என் உள்ளத்தில் மேலெழுந்து, தமிழ்ப் பல்கலைக்கழக நாடகத்துறையில் ஆய்வியல் நிறைஞர் (M.Phil.,) பட்டம் பயில வருகின்ற மாணவர்களுக்குத் தமிழ் நாடக வரலாற்றின் சமூக, அரசியல் கருத்துலகில் ஒரு புதிய சகாப்தத்தை உருவாக்கி, இன்று மறக்கடிக்கப்பட்டிருக்கும் தமிழ் நாடகக் காவலர்கள் ஒவ்வொருவர் பற்றியுமான ஆய்வுத் தலைப்புகளை வழங்கலாம் எனத் திட்டமிட்டிருந்தேன். நாடகத்துறையில் ஆய்வியல் நிறைஞர் படிக்கப் புகுந்த முதல் மாணாக்கர் திரு. முருகபூபதி, மதுரபாஸ்கரதாஸ் வழிவந்தவர் என்பதால் தரவுகளைச் சேகரிப்பது எளிமையாயிருக்கும் என்பதால், அவரை மதுரபாஸ்கரதாஸ் பற்றிய ஆய்வை மேற்கொள்ளச் சொன்னேன். அடுத்துவரும் மாணாக்கருக்கு விஸ்வநாததாஸ்தான் என்று மனதில் உறுதி கொண்டிருந்தேன் மாணவர்கள்யாரும்வராததால் விஸ்வநாத தாஸ் பற்றிய ஆய்வு மனத்தில் அந்தரத்தில் தொங்கிக் கொண்டிருந்தது. அதன் விளைவாய் ஜுலை 16, 1996-இல் விஸ்வநாததாஸ் நூற்றாண்டு நிறைவு விழாவைத் தமிழ்ப் பல்கலைக்கழக நாடகத்துறை கொண்டாடலாம் என்று துறையில் முடிவு செய்து வைத்திருந்தோம்.

அந்தச் சமயத்தில் திரு. மு. செல்லப்பன் அவர்கள் எழுதிய 'நாடக உலகிலிருந்து ஒரு தியாகி' கட்டுரையை 1996 ஜூன் 16ஆம் தேதி தினமணி இதழில் வாசிக்கும் வாய்ப்புக் கிடைத்தது. உடனே மதுரை தினமணி அலுவலகத்தைக் தொடர்பு கொண்டு அவர் முகவரியைக் கேட்டேன். அவர்கள், சென்னை அலுவலகத்தைத் தொடர்பு கொள்ளச் சொன்னார்கள். துறை நண்பர் திரு. கோவிந்தசாமி சொந்த வேலையாய்ச் சென்னை செல்ல இருந்தவரிடம் தினமணி சென்னை அலுவலகத்தில் நண்பர் ஞாநியைச் சந்தித்து முகவரியை வாங்கிவரக் கேட்டிருந்தேன். அவரும் வாங்கி வந்திருந்தார். 'சென்னையைச் சேர்ந்த யாரோ ஒருவர் எழுதியதாயிருக்கும், அவரை நூற்றாண்டு நிறைவு விழாக் கொண்டாட்டத்திற்கு அழைக்கலாம்' என்று கருதியிருந்த எனக்கு இரண்டு ஆச்சரியங்கள்! ஒன்று கட்டுரை எழுதியவர், கோவில்பட்டி அரசினர் மகளிர் மேல் நிலைப்பள்ளியில் பணிபுரியும் ஆசிரியர் என்பது! இன்னொன்று அவர் சொன்ன தகவல், ''விஸ்வநாததாஸுக்கு (பிறப்பு: 16-6-1386. இறப்பு: 31-12-1940) நூற்றாண்டு நிறைவு பத்தாண்டுகளுக்கு முன் முடிந்துவிட்டது இப்பொழுது 110-வது ஆண்டு நிறைவு என்பது!

அவர் சொன்ன தகவலின் பயனாய் நூற்றாண்டு நிறைவு இல்லையென்பதால் உடனே விழா எடுக்க வேண்டிய அவசியம் இல்லாது போனது. ஆயின் நாடகத்துறையின் மூலம் விரைவில் விஸ்வநாததாஸ் பற்றிய கருத்தரங்கம் ஒன்று நிகழ்த்த முடிவு செய்திருக்கிறோம்

ஒரு நாள் திடும்மெனக் கோவில்பட்டி புறப்பட்டுச் சென்று, பள்ளிக்கூடத்தில் திரு. மு. செல்லப்பனின் இல்ல முகவரி வாங்கி, நண்பகல் 1-30 மணிக்கு வீட்டில் அவரைச் சந்தித்தேன். முதலில் அவர் பயந்திருக்கவேண்டும், பிடிகொடுக்காமல்தான் பேசினார்! 'பள்ளிக்கு நேரமாகிவிட்டது

இப்பொழுது பேசமுடியாது' என்றார். தினமணி கட்டுரையைப் படித்து ஒருவன் வீட்டுக்குத் தேடிவரமுடியும் என்பதை அவர் நம்பவில்லை. '10 நிமிடங்கள் ஒதுக்க முடியுமா' என்றேன். விஸ்வநாததாஸ் பற்றிப் 10 நிமிடங்களில் பேச முடியாது' என்றார். 'பரவாயில்லை 10 நிமிடங்களில் பேசலாம். கூடுதலாகப் பேசவேண்டும் எனத்தோன்றினால் நீங்கள் வரச் சொல்லுகின்ற நேரத்திற்கு நானே வருகிறேன்' என்றேன். கொஞ்சம் கொஞ்சமாக நேரம் கழியக் கழியப் பல விசயங்களைப் பரிமாறிக் கொண்டபிறகு அவருக்கு என் மீது நம்பிக்கை வந்திருக்க வேண்டும்! அவருடைய சேகரிப்புகளை, விஸ்வநாததாஸ் பற்றிய அவரின் முயற்சிகளை அறிய அறிய என் மனம் மகிழ்ச்சிக் கிளைகளில் தொங்கத் தொடங்கியது. இவருடைய உழைப்பிற்கு உறுதுணையாய் இதே ஆர்வத்துடன் செயலாற்றும் அவரின் செல்வங்களைப் பார்க்கையில் மனத்திற்குக் கூடுதல் மகிழ்ச்சி!

வரலாற்றுப் பாடம் கற்றுக்கொடுக்கும் ஓர் ஆசிரியர், வெறுமனே பாடம் மட்டுமே புகட்டிக் கொண்டிருப்பதை விடுத்துத், தன் சமூகத்தில் அடையாளப்படுத்தத்தகும் சீர்மையாளரும், இத்தமிழ்ச் சமூகத்தினால் மறக்கப்பட்டிருக்கும் ''முதல் அரசியல் நாடகக்காரருமான'' திரு. விஸ்வ நாததாஸ் அவர்களைப் பற்றிச் சொந்த முயற்சியின்பேரில் நிதி நிறுவனங்களைத் தேடி அலையாது தானே நூல் எழுதி வெளியிட முயன்றிருப்பது பாராட்டுக்குரியது. இதுபோல் தமிழ்ச் சமூகத்தைத் தங்கள் உதிரத்தைக் கொட்டி உயர்த்த நினைத்த பல்வேறு துறை சார்ந்த விற்பன்னர்கள் பற்றிச் சிறு சிறு வரலாற்று நூல்களைக் கொண்டுவர திரு. செல்லப்பன் மற்றும் அவர் போன்றோர் முயல வேண்டும். அது. வளர்ந்துவரும் இளைய சமூகம் வரலாற்றில் தொடர்ந்துவரும், மூத்த தன் சமூகத்தைப்பற்றிப் பெருமைப்பட வைக்கும், திரு. செல்லப்பன் அவர்களின் குழந்தைகளின் பங்களிப்பைப்போல! வாழ்த்துகிறேன்.

தங்கள்

3-9-96

முனைவர் மு. இராமசுவாமி
துறைத்தலைவர் நாடகத்துறை
தமிழ்ப் பல்கலைக் கழகம்,

தஞ்சாவூர்-613 005.

## அச்சிட்டவர் பேசுகிறார்

வீரத்தியாகி எஸ். எஸ். விஸ்வநாததாஸ் அவர்கள் குரல் வளமிக்க பாடகர் மட்டும் அல்லர்; மிகச் சிறந்த நாடக வித்தகர் மட்டும் அல்லர்; விடுதலை விரும்பியாகவும் இருந்தார் தன் நாடகத்திறன், பாடிடும் திறன்யாவும் நாட்டின் விடு-தலைக்காக முழுமையாகப் படையலிட்டார் அதனால் அவரும் அவருடைய குடும்பமும் அடைந்த இன்னல்கள் ஏராளம்; ஏராளம்.

அதுமட்டுமன்று; இவ் விடுதலை வேள்வியை விரும்பி இயற்றியதில் இறுதி வரை கொள்கை மாறாமல் தன் உடை-மைகளையும் தன் வாணாளையும் முழுமையாகக் காணிக்கை யாக்கினார். இத்தகைய உயர் வேள்வியால் அன்றோ விடு தலை பெற்றோம்.

இவ் வாழ்க்கை வரலாற்றின் மூலம் விடுதலையின் உயர்வையும், சிறப்பையும், அவர் போற்றிய மேன்மையை யும், நாம் போற்ற வேண்டிய கடமையையும் உணரலாம். அன்னாரின் நற் குறிக்கோளுக்கான உயர் வீரம் நம் குருதி நாளங்களிலும் பொலிந்து நிலைப்பதாகுக.

இவ் வீர வரலாற்றைத் தொகுத்தளித்த நண்பர் மு. செல்லப்பன் எம்.ஏ,,எம்.எட்., அவர்களை எத்துணை-யளவு போற்றினும் தகும்.

இப்போற்றுதலோடு இந்நூல் ஒவ்வொரு இந்தியனின் உள்ளத்தில் பதியச் செய்வது நம்மனோர் கடமையாகும். என் கருத்து அங்ஙனம் செயல்படுத்தப்படுவதாகுக!

46, செக்கடி 3-ஆம் தெரு,
கோவில்பட்டி-628 501.

அன்புடன்,
-செம்மை நதிராசா

பொல்லாத வெள்ளையர்கள் நாட்டை விட்டுப்
போவது எந்நாளோ!
அல்லா ரசூல் அல்லா - இந்துன்பங்கள்
தீருவது எந்நாளோ?
தேவி பராசக்தி – இத் துன்பங்கள்
தீருவது எந்நாளோ?

வந்தேமாதரம் எனும் பேரொலி
வானைப்பிளக்குது பார் - அந்த
மந்திரத்தைக் கேட்டு வெள்ளைப்பேய்
மருண்டு ஓடுது பார்!

என்று பாட்டு எழுதினார்; அவரே சப்பளாக்கட்டை அடித்துக்கொண்டு கூட்டங்களில் பாடினார். மாணவனாகிய நானும் அவருடன் சேர்ந்து பாடினேன். பாரதி, சிவா, சிதம்பரனார் ஆகியவர்களின் சீடர்கள் மதுரை ஸ்ரீனிவாச-வரதன். தியாகராஜசிவம், சிதம்பர பாரதி ஆகியோரும் பாடினர்.

இதே தேசீயப் பாடலாசிரியர்களின் வழியில் வந்தவர் தான் மதுர பாஸ்கரதாஸ் அவர்கள். அக் காலத்திலேயே ராஜா சன்முகதாஸ், சுந்தரவாத்தியார், கவி ஆறுமுகனார், லட்சுமணதாஸ், கம்பம் பீர்முகமது ராவுத்தர், உத்தம-பாளையம் அப்பாவு ராவுத்தர், பூமிபாலகதாஸ், ஓரடிமுத்து வேல்பிள்ளை, கவிக்குஞ்சரம் போன்ற கவிஞர்களுக்கெல்லாம் வழிகாட்டும் ஒளிவிளக்காகத் திகழ்ந்தவர் மதுர பாஸ்கரதாஸ்

பஞ்சாப் படுகொலை, சண்டாளன் நீலன், பகத்சிங்கைத் தூக்கிலிட்டது, கதர்க்கப்பல் கொடி தோணுதே, லாலாலஜபதி ராய், காந்தியோ பரம சந்யாசி, சுயராஜ்யம் வெகுதூர-மில்லை ... தாழ்த்தப்பட்ட சோதரரைத் தாங்குவாருண்டா? இவ்வாறு எத்தனையோ பாடல்களை எழுதினார்கள்; இசை கூட்டினார்கள்; பாட்டுச் சொல்லிக்கொடுத்தார்கள்.

பஞ்சாபில் அமிர்தசரஸில், ஜாலியன் வாலாபாக் திடலில் நடைபெற்ற படுகொலை பற்றி, பாஸ்கரதாஸின் பாடலை, விசுவநாததாஸ் கண்ணீர் மல்க உருக்கமாகப் பாடும் போது மக்கள் அனைவரும் கண்ணீர் வெள்ளத்தில் தேம்பினர்.

விசுவநாததாஸின் நடிப்பும் கம்பீரவசனமும், எழுச்சியூட்டும் பாட்டும் மக்களை அந்நிய ஆட்சிக்கு எதிராக ஆர்த்தெழச் செய்ததால், ஆட்சியாளர்கள் அலறினார்கள். நாடகத்துக்குத் தடைவிதித்தார்கள்; நாடக மேடையில் பாடும்போதே தடுப்பார்கள். மாலையில் நாடகம், இரவில் கைது, மறுநாள் காலையில் நீதியின் அபராதம் அல்லது சிறைத்தண்டனை-பல மாதங்கள் கழித்து விடுதலை; மீண்டும் நாடகம்-தேசீயப் பாடல் - தடை - தண்டனை, சிறை ... ... இவ்வாறு நாடக மேடையை விட்டு ஏறினால் ரயிலாக, ரயிலை விட்டு இறங்கினால் ஜெயிலாக அவரின் வாழ்க்கை ஓடியது. அக்காலத்திய தேசபக்தர்களின் நிலையே, என் வாழ்க்கை உட்பட அவ்வாறாகத்தான் இருந்தது. திருநெல்வேலியில் தாசைக் கோர்ட்டில் நிறுத்தியபோது தாசுக்காகக் கப்பலோட்டியதமிழன் வ. உ. சிதம்பரனாரே வாதா வந்தா ரென்றால் தாஸ் எவ்வளவு பெரிய பாக்கியசாலி!...

தாஸ் அவர்களைப்பற்றி, மகாகவி பாரதியாரின் சீடர் வ. ரா. (வ. ராமசாமி அய்யங்கார்) அவர்கள் ''புயல் காற்று தாஸ்'' என்று குறிப்பிட்டுள்ளார். மேலும், ''விசுவநாததாஸ் அவர்களைப் பாமர மக்கள் கொண்டாடக் கொண்டாட, அரசாங்கத்தார் அவர் பேரில் அடுத்தடுத்து 144 செக்ஷன் பாணப்பிரயோகம் செய்தே வந்தார்கள். அவர் பாடிய 'கொக்குப் பறக்குதடி பாப்பா' என்ற பாட்டுக்கு எத்தனை தரம் ஒன்ஸ்மோர்! சொல்லி முடியாது. 'கதர்க்கப்பல் கொடி தோணுதே' என்று கம்பீரமாக தாஸ் பாடும் போது ஜனங்கள் பரவச மடைந்து போவார்கள். அவர்களுடைய உடம்பு புல்லரித்துப் போய்விடும். விஸ்வநாததாஸ் பிறவி சுதந்திரப்பிரியன்'' என்று போற்றியுள்ளார் வ. ரா.

இலக்கிய மேதை ப. ஜீவானந்தமும், சுப்ரமணிய சிவாவின் சீடர் ந. சோமையாஜுலுவும், ம. பொ. சி. யும் தாஸ் அவர்களைப் பற்றி வெகுவாகப் பாராட்டி யுள்ளார்கள். தேசபக்தர் ரெ. சிதம்பர பாரதி தொகுத்த மதுரை தியாகிகள் மலரிலும் சோமையாஜுலு தொகுத்த மதுரை மாவட்ட சுதந்திரப் போராட்ட வரலாற்றிலும் தாசைப் பற்றிப் புகைப் படத்துடன் வெளியிட்டுள்ளார்கள் அவருடைய தம்பி எஸ் எஸ். சண்முகதாஸ் பற்றியும், இவர் மகன் எஸ்.எஸ்.வி, சுப்ரமணியதாஸ் பற்றியும், இவர் அக்காள் மகன் டி.எம். சின்னச்சாமி பற்றியும், குடும்பத்தினர் பற்றியும் அவர்கள் நாட்டின் விடுதலைக்காக ஆற்றிய கலைத்தொண்டு, சிறை வாசம் ஆகியவை பற்றியும் குடும்ப நலன் பேணாமல் நாட்டு நலனையே லட்சியமாகக் கொண்டிருந்தது பற்றியும் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

1940 டிசம்பர் 31-ல் சென்னை நாடக அரங்கில் கழுகாசலக் கந்தன் வேடத்தில் மயில் வாகனத்தில் அமர்ந்து பாடத் தொடங்கும் போதே மயக்கமுற்றுச் சாய்ந்து விட்டார்; ஆம் நிரந்தரமாக.

தேசவிடுதலைப் போரில் பொங்குமாங் கடலெனப் பொங்கிக் கொண்டிருந்த மக்களுக்குத் தாசின் மறைவானது, தாங்க முடியாத துன்பமாகித் துயரமாகிச் சோர்வாகிப் போரின் நடுவில் வஜ்ராயுதம் பறிபோனது போலாயிற்று. கலையுலகம் கண்ணீரில் ஆழ்ந்தது. தாஸ் மரணமுற்ற நாளில் நான் கோவைச் சிறையில் இருந்தேன். அதனால் நான் இறுதி ஊர்வலத்தில் கலந்துக் கொள்ள இயலவில்லை.

ஊர் தோறும் நாடகம் நடக்கும். மேடை தோறும் தேசீயப் பாடல் ஒலிக்கும் தாசின் நாடகங்களுக்கு விளம்பரம் எவ்வாறு இருக்குமென்பதைப் பற்றித் தமிழ்நாடகக் கலைமணிகள் என்ற நூலில் குறிப்பிட்டிருப்பதைத் திரு மு. செல்லப்பன் அவர்கள் அப்படியே குறிப்பிட்டுள்ளது வியக்கத்தக்கதாகும்.

விளம்பர நோட்டீஸ் எவ்வாறு இருக்குமென்றால், 'ஜெகமெங்கும் புகழ்பெற்ற வீர, தீர, பராக்கிரம ராஜாதி-ராஜன், ராஜமார்த் தாண்டன், ராஜகம்பீரன் கடல் கடந்து சிங்கப்பூர், பினாங்கு, இலங்கை, பர்மா ஆகிய நாடுகளில் வெற்றிக் கொடி நாட்டிய சிங்கம் ...... கானவேலன், சங்கீத சாகித்ய, ஞான விடுதலை வீரர் தியாகச் செம்மல் விஸ்வநாத தாஸ் வந்து விட்டார். ஒரே ஸ்பெஷல் நாடகம்; இச் சமயம் தவறினால் மறு சமயம் வாய்ப்பதரிது. ஏமாந்து போகாமல் முன்னிடம் தேடுங்கள் ... காணத்தவறாதீர்கள். தரை நான்கு அணா. பெண்களுக்குத் தனி இடம் உண்டு!' என்று எழுதப் பட்டிருக்கும்.

இதை வாசிக்கும் போதே நமது நாலணா, டிக்கட் ரூமுக்குள் போய் விடும். டிக்கட் நமது கைக்கு வந்து சேரும். பீடும் பெருமையும் அப்படி இருந்தது.

தொலைக் காட்சிக்கு விஸ்வநாததாஸ் படம் போட, அவரது வரலாறு வேண்டுமென்று இசை அமைப்பாளர் கங்கை அமரன் இரண்டு ஆண்டுகளுக்கு முன்னே என்னிடம் கேட்டார். விவரம் தேடுவதற்காகப் பலவிடங்களிலும் அலைந்தேன். பலரையும் அணுகினேன். உருப்படியாக ஒன்றும் கிடைக்கவில்லை. முயற்சியைக் கைவிட்டேன்.

இந்நிலையில், நூலாசிரியர் செல்லப்பன் அவர்கள் ''வீரத்தியாகி விஸ்வநாததாஸ்'' என்ற இந்நூலை அழகுடன் தேச பக்த உணர்ச்சியுடன், நிறைய விவரங்களுடன் தொகுத்துள்ளதானது சுதந்திரத்தை நேசிக்கும் அனைவருக்கும் மகிழ்ச்சியையும் மனநிறைவையும் அளிக்கிறது. அதுவும், சுதந்திரத்தின் பொன்விழா ஆண்டில் விடுதலை வீரர் விஸ்வநாததாஸ் வரலாறு வெளியிடப்படுவது சாலவும் பொருத்தமானது.

70, மேல மாசி வீதி,
மதுரை - 625 001.

அன்பன்,
ஐ. மாயாண்டி பாரதி

## நன்றிப் பூக்கள் ... ... !

- ''வீரத்தியாகி விஸ்வநாததாஸ்'' என்ற இந்நூலை வெளியிட்டுப் பெருமைப் படுத்திய மத்திய இளைஞர் நலம் மற்றும் விளையாட்டுத்துறை இணையமைச்சர் மாண்புமிகு R. தனுஷ்கோடி ஆதித்தன் அவர்கள் பெருந்தன்மைக்கு ... ... ...

- இந் நூலை எழுதக்காரணமாயிருந்த முதுபெரும் எழுத்தாளர் திருவாளர் ரகமி அவர்களின் தூண்டுதலுக்கு ... ... ...

- நூல் வடிவம் பெற குறிப்புகள், விஸ்வநாத தாசின் பாடல்கள் அடங்கிய ஒலி இழை ஆகியவற்றைக் கொடுத்துதவிய கோவில்பட்டி அண்ணன் திரு வி.அ. காளியப்பன் அவர்களின் அன்புக்கு ... ... ...

- குறிப்புகளும் அவரது தந்தை கைப்பட எழுதி வைத்திருந்த சில பாடல்களும் மனமுவந்து எனக்களித்த தியாகியின் பேரன் அன்புத்தம்பி தூத்துக்குடி காசிவிஸ்வநாதனின் ஒத்துழைப்புக்கு ... ... ...

- வண்ண அட்டை அச்சிட உதவியும் கடிதத் தூதுகளின் மூலம் என்னை ஆட்டுவித்து ஆடவைத்த எனது இலக்கிய வழி காட்டி ஓவியர் ஆயனின் சீர்மைக்கு ....

- கைப் படியை மேற்பார்வையிட்டுப் பொருத்தமான சொற்கள், இனிய தலைப்புகள், சீரியமேற்கோள்கள் தந்து நூலினைத் தரப்படுத்தியும் அடிக்கடி தக்க அறிவுரை வழங்கியும் என்னை வழி நடத்திய கோவில் பட்டி வ. உ. சி. அரசு மேனிலைப்பள்ளி மேனாள் தலைமையாசிரியர் பாவலர் திருமிகு ஆ. முத்துராமலிங்கம் அவர்களின் உதவிக்கு ... ... ...

- அருமையான அணிந்துரை வழங்கிச் சிறப்பித்திருக்கிற மதுரை தியாகி திருமிகு ஐ. மாயாண்டி பாரதி அவர்களின் பண்புக்கு ... ... ...

- வாழ்த்துரை வழங்கிப் பெருமைப் படுத்திய தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழக நாடகத்துறைத் தலைவர் முனைவர் மு. இராமசுவாமி அவர்களின் உணர்வுக்கு...

- இந்த நூல் குழந்தை உங்கள் கைகளில் தவழ அச்சிட்டு உதவிய நதிசந்திரா அச்சக உரிமையாளர் பாவவர் செம்மை நதிராசா, அவர் மகன் ரா. சந்திரமுகில் மற்றும் அச்சக நண்பர்கள் திரு ச. செண்பகராஜன், திரு அ. தங்கவேல், திரு கே வடிவேல் திரு. வி. சுப்பிரமணியன் திரு. அ. நாகூர்கனி ஆகியோர் உழைப்பிற்கு ... ... ...

- நாடகமேதையின் திருக்கோவிலான திருமங்கலம் வீட்டைக் காணவும் தியாகி பற்றிச் சில தகவல்களும் வழங்கிய தோழர் திருமங்கலம் பெ சந்தானம் அவர்களின் பரிவுக்கு ... ... ...

- வீரத்தியாகியின் மூத்த மகன் மனைவி கண்ணம்மா, மூத்தமகள் பிச்சம்மாள், இளைய மகள் தங்கத்தாய், இளைய மகன் முத்தையாதாஸ் ஆகியோரின் இனிய நெஞ்சங்களுக்கு ... ... ...

- தியாகியின் புகழைப் பரப்பிவரும் தியாகி விஸ்வநாத தாஸ் நற்பணி மன்ற உறுப்பினர்களின் தொண்டுக்கு...

- நூலெழுதத் துணை நின்ற என் மனைவி சாரதா, என் குழந்தைச் செல்வங்கள் கவிதா, அனிதா, முத்துசரவணன், அருண்குமார் ஆகியோரின் உற்சாகமூட்டலுக்கு ... ... ...

நெஞ்சத் தோட்டத்திலிருந்து நன்றிப் பூக்களைத் தூவுகின்றேன்.

~ மு. செல்லப்பன்



# வரலாற்று வாசலில் ......!

''வாழிய செந்தமிழ் வாழ்க நற்றமிழர்
வாழிய பாரத மணித்திரு நாடு''

என்று இன்று விடுதலை முழக்கம் எங்கும் கேட்கிறது ஆனால் அன்று இந்தியர் அனைவருடைய கைகளிலும் அடிமை விலங்குகள். 'இம் வென்றால் சிறைவாசம் ஏனென்றால் வனவாசம்' என்ற கொடுமையின் உச்சகட்டத்தில் ஆங்கில அரசு விளங்கியது.

''இதந்தரு மனையின் நீங்கி
இடர்மிகு சிறைப்பட் டாலும்
விதந்தரு கோடி யின்னல்
விளைத்தெனை அழித்திட் டாலும்
பதந்திரு இரண்டு மாறிப்
பழிமிகுந் திழிவுற் றாலும்
சுதந்திர தேவி நின்னைத்
தொழுதிடல் மறக்கி லேனே''

என்ற தேசிய கவி சுப்பிரமணிய பாரதி இம் முழக்கத்தை முன்மொழிய விஸ்வநாததாஸ் வழி மொழிந்தார். ஆம் ...... தேசத்தைத் தெய்வமாகக் கண்ட பாரத அன்னையின் திருத்தொண்டர் அவர். இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழின் வித்தகர். இசையுலகின் வேடந்தாங்கல். ஆங்கிலப் பேரரசைக் கதிகலங்க வைத்துத் தமிழர்களுக்கு வழி காட்டிய கலங்கரை விளக்கம்.

பாரத அன்னையின் விலங்கொடிக்க அவர் நெருப்பாற்றைக் கடந்து வந்தார்; . வறுமைச் சூறாவளியில் நடந்து

வந்தார். ஆனாலும் மனத்திண்மையோடு தொடர்ந்து வந்தார். கடவுள் விண்ணைப் படைத்தார்; மண்ணைப்-படைத்தார். ஆனால் ஓர் அடிமையைக் கூடப் படைக்க-வில்லை என்பது அவரது முடிபு. கூட்டுக்குள் இருந்தால் குயில் கூடப் பாடாது. அழத்தான் செய்யும் என்பது அவரது முன்னுரை ... ... முடிவுரை எல்லாமே.

அவர் மறைந்த ஏழாண்டுகளுக்குப் பின்னரே இந்த நாடு விடுதலைக் காற்றைச் சுவாசித்தது. விடுதலை இந்தி-யாவை அவர் புறக் கண்ணால் காணவில்லை. இதைவிடக் கொடுமை அவர் வரலாறு விடுதலையடைந்து 55 ஆண்டு களாகியும் இன்றும் யாருக்கும் முறையாகத் தெரியவில்லை. தமிழக வரலாறு, அதுவும் வாழ்க்கை வரலாறு குருடாகவே உள்ளது என்பது ஓர் அறிஞரின் கருத்து எத்துணை நெஞ்சைச் சுடும் செய்தியிது?

திருவாளர் இரகமி அவர்கள் ''தமிழகத்தில் தோன்றிய விடுதலை வீரர்கள் பலர். அதில் சிலருடைய பெயர்கள் வரலாறு மட்டுமே பிரபலமாயின. இன்னும் பலருடைய வீரவரலாறுகள் அறிய முடியாமலும் புதை பொருள் ஆராய்ச்சிக்கு உட்பட்டு மறைந்தும், மங்கியும் வருகின்றன. அப்படிப் பட்ட ஒரு வீரத்ததமிழர்தான் நம் நாட்டு விடுதலைக்காகத் தன் உடல், பொருள், ஆவி இம் மூன்றையும் அர்ப்பணித்து நாட்டு மக்களுக்குச் சுதந்திர உணர்வையூட்டிய தியாகி எஸ். எஸ். விஸ்வநாததாஸ்'' என்பார்.

31 – 12 – 95 விஸ்வநாத தாசின் மறைவு நாள். தூத்துக்குடி வானொலியில் அவரைப்பற்றி உரையாற்றும் வாய்ப்புக் கிடைத்த போது அவர் பற்றிய தகவல்கள் எதுவும் நூலகத்தில் கிடைக்கவில்லை. 12-1-92-ல் தினமணிக் கதிரில் இரகமி எழுதிய கட்டுரையின் துணை கொண்டு வானொலி-யில் பேசினேன். நண்பர் ஒருவரின் வழிகாட்டுதலின் பேரில் கோவில்பட்டி திரு. வி. அ. காளியப்பன் அவர்கள்தான் ரகமி

கட்டுரை மற்றும் பல குறிப்புகள், அவரது பாடல்கள் அடங்கிய ஒலிப் பேழை, இவற்றை மனமுவந்து என்னிடம் கொடுத்து வானொலி உரையைச் சிறப்பாகத் தயாரிக்க உதவினார்.

விஸ்வநாத தாசின் வாழ்க்கை வரலாற்றை நூலாக்க வேண்டுமென்ற எனது வேட்கையின் காரணமாக மேலும் முயன்றேன். களப்பணியில் இறங்கினேன். தியாகியின் இளையமகன் சாத்தூர் திரு. முத்தையாதாஸ், இரண்டாவது மகன் காசிநாதனின் மகன் காசிவிசுவநாதன் இவர்களைச் சந்தித்தேன். இவர்கள் மூலம் சில தகவல்களையும் குறிப்பு-களையும் பெற்றேன். சென்னை சூளை டாக்டர் புலவர் விநாயகம் தியாகியின் நூற்றாண்டு விழாவையொட்டி வெளி யிட்ட ஒரு நூலை எனக்கு அனுப்பி வைத்தார்.

தியாகியின் மூத்தமகன் தியாகி சுப்பிரமணிய தாஸ் மனைவி கண்ணம்மாள், மூத்தமகள் பிச்சம்மாள், இளைய மகள் தங்கத்தாய் இவர்களையெல்லாம் தூத்துக்குடியில் சந்தித்த போது கருத்து முத்துகள் எடுத்தேன்.

திருமங்கலம் வீடுதான் விஸ்வநாத தாசின் பெருமையை அவரது இளமைக்கால வளமையைக் காட்டுகிறது. பின்னர் இவ்வீடு நாட்டுக்காக ஏலம் போயிற்று. தோழர் பெ. சந்தானம் அவர்களோடு அந்த வீட்டைக் கண்டு வணங்கிய எனக்கு வியப்புக்கு மேல் வியப்பு. இன்றைய மதிப்பில் அவ் வீடு 20 லட்சம் பெறும் என்பது எனது கணிப்பு, செல்வச் செழிப்பில் வாழ்ந்த அந்த மேதை நாட்டு விடுதலைக்காக வீட்டையே இழந்து வறுமைக்கு வாழ்க்கைப் பட்டாரே! என்ன கொடுமை! இன்று அவ் வீடு பேணப்படாமல் பாழடைந்து கழிப்பிடமாகக் கிடக்கும் காட்சி என் நெஞ்சைப் பிழிகிறது. இந்தக் கொடுமைக்கு என்று முற்றுப்புள்ளி என்பது என்வினா,

அவரது மேடை நாடகங்கள் பார்த்த சில பெரியோர்-களைச் சந்தித்து, 'இவரைப்பற்றி ஏதேனும் செய்தி கிடைக்-

காதா?' என்று ஏங்குவேன். ஏதோ சொல்வதைப் போலத் தொடங்குவார்கள். கதை கேட்கும் குழந்தையைப் போல நானும் ஆவலோடு காத்திருப்பேன். 'விஸ்வநாததாஸ் நன்கு பாடுவார்; நடிப்பார். வேறு செய்திகள் நினைவில்லையே' என்று கையை விரிப்பர். இவ் வரலாறு இருபதாண்டுகளுக்கு முன்பு எழுதப் பட்டிருந்தால் இன்னும் சூடும் சுவையுமாக இருந்திருக்குமே என்று என் நெஞ்சம் ஏங்கும்.

துணிந்து இறங்கினேன்; தொடர்ந்தது என் பணி. தூயவர் வரலாற்றை எழுதியே தீருவது என்ற உறுதியின் அடையாளமே உங்கள் கையில் தவழும் இந் நூல்.

இந் நூலின் முதற்பகுதி தியாகியின் வரலாறு, இரண்டாம் பகுதி அவர் பாடிய பாடல்கள், மூன்றாம் பகுதி கவிஞர் நெஞ்சில் விஸ்வநாத தாஸ் – இவைகளை உள்ளடக்கிய வரலாறே நீங்கள் படிக்கப் போவது.

ஒவ்வொரு பூவாக அமர்ந்து தேன்சேகரிக்கும் தேனீ போல இந்த வரலாற்று நூலைக் கொண்டுவர நான் பட்ட துன்பங்களைப் பாரதி மொழியில் இப்படிச் சொல்லலாம்:

> ''நாளொன்று கழிதற்கு நான்பட்ட பாடெல்லாம்
> தாளம் படுமோ! தறிபடுமோ! யார்படுவார்?''

எனினும் குழந்தையின் பூ முகத்தைக் கண்டவுடன் பேறுகால வேதனையை மறக்கும் தாயைப் போலபட்ட துன்பங்களைப் புத்தகம் முழுமை பெற்ற போது மறந்து மகிழ்ந்தேன்.

வில்லியம் கிளாட்சன் சொன்னதைப் போல மனிதனின் மூன்று பட்டங்களான ஈடு இணையற்ற தியாகி, ஒப்பற்ற வீரன், பெருமை மிக்க சான்றோன் என்ற மூன்று நிலைகளிலும் ஒப்பற்ற இடம் பெற்ற அவர் வாழ்க்கை வரலாற்

நூல் படைக்கும் வாய்ப்பு எனக்குக் கிட்டியதை என்வாழ்க்கையின் பெரும் பேறாகக் கருதுகிறேன்.

பூவோடு சேர்ந்த நாரும் மணம் பெறுவது போல அந்த மாமேதையோடு என்னை இணைத்துப் பெருமை கொள்கிறேன். ஆயினும் அவர் ஆற்றிய தியாகத்துக்கு எளியேனின் மிகச் சிறிய அன்புக் காணிக்கைதான் இந் நூல்.

பசிக்குச் சோறாக – பார்வைக்குக் கண்களாக - முதுமைக்கு ஊன்று கோலாக - முத்தமிழுக்கு அளவு கோலாக விளங்கிய வீரத்தியாகி விஸ்வநாத தாஸ் அவர்களின் வாழ்க்கை வரலாற்று நூல் இவ்விடுதலைப் பொன் விழா ஆண்டில் வெளிவருவதும் ஒரு வகையில் பொருத்த முடையதே.

ஆராய்ச்சிக்குப் பரப்பளவே இல்லை என்பார்கள். இந் நூல் தொடர்பான புதிய செய்திகள், திறனாய்வுகள் உங்கள் நட்புத் தூதாக அனுப்பி வையுங்கள். நன்றியோடு ஏற்று மேலும் செழுமைப்படுத்துவேன்.

மண்ணுக்குள் புதைக்கப்பட்ட வைரத்தை ஓரளவு தோண்டியெடுத்துள்ளேன். நூலை வாங்கிப் பயன்பெறுங்கள்; வாழ்த்துங்கள் என்று வரலாற்று வாசலில் நின்று உங்கள் இனிய வரவுக்காகக் காத்திருக்கிறேன்.

கோவில்பட்டி. அன்புடன்,

28-11-96 - மு. செல்லப்பன்

## இதயம் பூரிக்கிறார் ... ...
## இலக்கியச் செல்வர்

நாடு அடிமைத் தளையில் பிணைப்புண்டு கிடந்த நேரத்தில் நாடகத்தால், நாட்டோர் நெஞ்சில் விடுதலைத் தீயினை மூட்டியவர் வீரத்தியாகி விஸ்வநாததாஸ்.

1886-ஆம் ஆண்டு ஜூன் 16-ஆம் நாள் தோன்றித் திக்கெட்டும் தித்திக்கும் தேன் தமிழ்ப் பாட்டால் தேசபக்தியை ஊற்றெடுக்கச் செய்த உத்தமத் தியாகியின் நூற்றாண்டு விழாவைத் தேசமெங்கும் சீரும் சிறப்புமாகக் கொண்டாடி-யிருக்க வேண்டும்.

1978-ஆம் ஆண்டு விஸ்வநாத தாசின் திரு உருவப் படத்தை ஆயிரக்கணக்கில் அச்சிட்டு இலவசமாகப் பலருக்கு வழங்கிய சிறு தொண்டினை யான் செய்தேன்.

விஸ்வநாத தாசின் புகழ் வளர்க்கப் பாடுபடும் பலரும் கலந்துகொண்ட விழாவில் தமிழ்நாடு காங்கிரசின் தலைமை யிடமான சத்தியமூர்த்தி பவனில் விஸ்வநாத தாசின் திரு உருவப் படத்தைக் திறந்து வைத்தோம்

சென்னை யானைகெவுணியில் விசுவநாத தாசின் முழு உருவ வெண்கலச் சிலை நிறுத்தத் திட்டமிட்டு, அரசின் அனுமதிக்காகக் காத்திருக்கிறோம்.

'வீரத்தியாகி விஸ்வநாததாஸ்' என்ற நூலை எழுதி யுள்ளார் ஆசிரியர் மு. செல்லப்பன்எம்.ஏ ,எம்.எட்., அவர்கள் இதில் அடங்கியுள்ள அரிய செய்திகளை அனைவரும் அறிய வேண்டும்.

1911-ம் ஆண்டு அண்ணல் காந்தி அடிகள் தூத்துக்குடி வந்த போது விஸ்வநாததாஸ் பாடிய பாடலைக் கேட்டார்.

தமிழ்ப்பாட்டாக இருந்த போதிலும் காந்தியடிகளைக் காந்தமாக ஈர்த்தது. ''இசையால் இந்தியத் தாயின் அடிமை விலங்கை உடைத்தெறிய மக்களைத் தட்டி எழுப்புங்கள்'' என்றார் காந்தி மகான். அன்றிலிருந்து கதராடை அணிந்து பாரத மாதாவிற்குத் தொண்டு செய்யும் தளபதியானார் தாஸ்.

சிறைவாசம், சிரமங்கள் அனைத்தும் தேச பக்தியின் முன் தடையாய் நிற்க முடியவில்லை. ''கொட்டிக்குவிக்கிறோம் பணத்தை'' என்று பலர் சொன்னபோதும் சலனப் படாமல் நெஞ்சத்துணிச்சலோடுவீறு கொண்டு தேசத் தொண்டு செய்த,விஸ்வநாத தாசைப்பற்றிய இந் நூல் சமுதாயத்திற்குத் தேவையானது. ''சும்மா கிடைக்கவில்லை சுதந்திரம்'' என்பதை எடுத்துக் காட்டுவது. நூலாசிரியரின் பாரத பக்தி, பக்கத்திற்குப் பக்கம் தெரிகிறது. தேசபக்தி எழுத்திற்கெழுத்துச் சுடர்விட்டு எரிகிறது.

சிற்றோடையில் நனைகின்ற சுகம் தமிழ்நடையில் கிடைக்கிறது. உலக அறிஞர்களின் உள்ளக் கருத்துகளை உரிய இடங்களில் பதித்து வைக்கிறார். விஸ்வநாத தாஸ் வாழ்க்கை வரலாற்றை முதலில் தன் இதயத்தில் தேக்கிப், பின்னர் அதனை நூலாக ஆக்கி அனைவருக்கும் படைக்கிறார் ஆசிரியர்.

இந்நூலை மாணவர்களுக்குப் பாட நூலாக வைக்கலாம் ஆசிரியர் தொண்டு தேசபக்தர்கள் அனைவர் நெஞ்சங்களிலும் குடிகொண்டு என்றென்றும் புகழ்ச்சிக் குரியதாய் வாழும் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. பல நூல்கள் எழுதி இறவாப் பெரும்புகழ் பெற வாழ்த்துகின்றேன்.

அன்புடன்,

சென்னை-600 004. குமரி அனந்தன்,

24-11-96 தலைவர், தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி



வீரத் தியாகி விஸ்வநாத தாஸ்

தோற்றம்: 16-6-1886 மறைவு: 31-12-1940



அண்ணனை நிழல் போல் தொடர்ந்து
ஆர்மோனியம் வாசித்த தம்பி
**சண்முகதாஸ்**

# வீரத்தியாகி விஸ்வநாததாஸ்

## 1. வரலாறு தந்த வரலாறு

சரித்திரத் தேர்ச்சிகொள் - பாரதியின் ஆத்திசூடி

கி. பி. பதினெட்டாம் நூற்றாண்டில் பெரும்பாலான ஆசிய ஆப்பிரிக்க நாடுகள் ஐரோப்பியர்களின் குடியேற்ற நாடுகளாக மாறின. அதே போன்று கி. பி. 1757-ல் நடந்த பிளாசிப்போரை அடுத்து இந்தியாவும் இங்கிலாந்து நாட்டின் குடியேற்றமாக மாறியது. இதன் காரணமாக நம் நாட்டு மக்கள் உரிமையிழந்து பலவிதத் துன்பங்களுக்கு ஆளாயினர். வந்தவர்க்குச் சொந்த நாட்டில் நாம் அடிமைகளானோம்.

நமது உரிமைகளை மீட்கவும் படிப்படியாக சுதந்திரம் பெறவும் கி.பி. 1885-ல் காங்கிரஸ் பேரியக்கம் தொடங்கப்-பட்டது. ஆரம்பத்தில் காங்கிரஸ் தலைவர்கள் நிர்வாக சீர்திருத்தங்கள் செய்யுமாறே அரசைக் கோரினர். பின்னர் கோரிக்கைகளை அணுகும் முறையில் ஏற்பட்ட கருத்து வேறுபாட்டினால் காங்கிரசில் மிதவாதிகள், தீவிரவாதிகள் என இரு பிரிவுகள் ஏற்பட்டன. கோபாலகிருஷ்ண கோகலே மிதவாதிகளின் தலைவராயிருந்தார். பாலகங்காதர திலகர் தீவிர வாதிகளின் தலைவரானார்.

இதற்கிடையில் கி. பி. 1916-ஆம் ஆண்டு தன்னாட்சி கோரி அன்னிபெசன்ட் அம்மையாரால் 'ஹோம் ரூல்' இயக்கம் தொடங்கப்பட்டது.

மக்களின் எதிர்பார்ப்புகளை நிறைவேற்ற கி.பி. 1919ல் கொண்டு வரப்பட்ட மாண்டேகு செம்ஸ் போர்டு சீர்திருத்தங்கள் இரட்டையாட்சியைக் கொணர்ந்து மக்களை வெறுப்படையச் செய்தது. இதனை எதிர்த்துப் போராடிய நம் நாட்டு விடுதலைப் போராட்ட வீரர்களை அடக்கும் நோக்கத்துடன் ரௌலட் சட்டம் கொண்டு வரப்பட்டது.

இச்சட்டத்தின் துணை கொண்டு பஞ்சாபில் ஜாலியன் வாலாபாக் என்னுமிடத்தில் அமைதியாக நடத்து கொண்டிருந்த கூட்டத்தில் கலந்து கொண்டிருந்த மக்களை நோக்கிச் சுடுமாறு கட்டளையிட்டான் டயர் என்னும் காவல்துறை அதிகாரி இக்கட்டளையின் பேரில் 1650 ரவுண்டுகள் சுட்டதில் 1526 பேர் மாண்டனர் நூற்றுக் கணக்கானோர் காயமுற்றனர் துப்பாக்கியில் குண்டு உள்ள வரை மக்களைச் சுட்டு மகிழ்வுற்றது ஆங்கில அரசு. உலக வரலாற்றில் நடந்த மிகக் கொடுமையான செயல் இது. கி.பி. 1919 ஏப்ரல் 13-ம் நாள் நடைபெற்ற இப் படுகொலையை எதிர்த்து நாடெங்கும் கிளர்ச்சிகள் நடைபெற்றன.

மாவீரன் பகத்சிங் ஒரு தீவிரப்போராளியாக மாறுவதற்கும் இந்நிகழ்ச்சியே காரணம் அதோடு வேறு பல வீர இளைஞர்களும் ஆங்கிலேயர்களுக்கு எதிராகத் தீவிரவாத அமைப்பில் சேருவதற்கும் இந்நிகழ்ச்சியே காரணமாக அமைந்தது.

1920-ல் திலகர் பெருமகன் இறந்தபின் காங்கிரசின் ஒரே வழி காட்டியாகத் திகழ்ந்த காந்தியடிகள் காங்கிரசின் தலைமைப் பொறுப்பேற்றார். நம் தாய்த்திரு நாட்டின் அடிமைத் தளையை உடைத்தெறியத்தம் உடலையும் உள்ளத்தையும் காணிக்கையாக்கினார். இவரது வருகைக்குப் பின்னரே இந்திய விடுதலை இயக்கம் ஒரு மக்கள் இயக்கமாக மாறத் தொடங்கியது.

நாடெங்கிலுமுள்ள பல்வேறு தேசியத்தலைவர்கள், தொண்டர்கள், காந்தியடிகளின் தலைமையின் கீழ் ஆங்கில ஆட்சியை எதிர்த்துப் போராட முன் வந்தனர். தமிழ்நாட்டைப் பொறுத்த மட்டில் செக்கிழுத்த செம்மல் வ. உ. சிதம்பரனார் சுதேசிக் கப்பல் கம்பெனி நடத்தியும் சுதேசி இயக்கத்தை ஆதரித்தும் அளப்பரிய தொண்டாற்றினார்.

''நமக்குத்தொழில் கவிதை, நாட்டுக்குழைத்தல் இமைப்பொழுதும் சோராது இருத்தல்'' என்ற இலட்சிய வேகத்தோடு விடுதலைப் போராட்டத்தில் பங்குகொண்ட பைந்தமிழ்ப்புலவன் பாரதி.

என்று தணியும் இந்தச் சுதந்திர தாகம்
என்று மடியும் எங்கள் அடிமையின் மோகம்
என்றெம தன்னை கைவிலங்குகள் போகும்
என்றெம தின்னல் தீர்ந்து பொய்யாகும்

என்று ஆவேசக் குரல் கொடுத்தான்.

இவர்களுக்குப் பிறகு மூதறிஞர் ராஜகோபாலாச்சாரி, தீரர் சத்தியமூர்த்தி, பெருந் தலைவர் காமராசர் போன்றவர்கள் சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்ட மிக முக்கிய தலைவர்கள். இவர்களின் ஒத்துழைப்புடனும் காந்தியடிகளின் சீரிய வழிகாட்டுதலிலும் விடுதலைப் போராட்டம் வெற்றியை நோக்கி வீறு நடைபோட்டது,

பல்வேறு தலைவர்கள், தொண்டர்கள் ஆங்கில ஆட்சியை எதிர்த்துப் போராட முன்வந்ததைப் போல இவ்விடுதலை வேள்வியில் பல்வேறு நாடகக் கலைஞர்களும் பெருமளவில் பங்கு கொண்டனர்.

தேசபக்தியையும் சுதந்திர ஆர்வத்தையும் தூண்டக்கூடிய நாடகாசிரியர்கள் பலர் தோன்றினர். இவர்களுள் குறிப்பிடத்தக்க நாடகாசிரியர்கள் தெ. பொ. கிருஷ்ணசாமிப் பாவலர்,

வெ. சாமிநாதசர்மா, எஸ். டி. சுந்தரம் போன்றோர். பூமி-பாலகதாஸ், ராஜா சண்முகதாஸ், இலட்சுமணதாஸ், கவி ஆறுமுகனார், இசக்கிமுத்து போன்றோர் மிகச்சிறந்த பாடலாசிரியர்கள். இதில் மிகச்சிறந்த நாடகாசிரியராகவும், பாடலாசிரியராகவும் விளங்கிப் புகழ் பெற்றவர் தேசியம் வளர்த்த செந்தமிழ்க் கவிஞர் மதுர பாஸ்கரதாஸ் அவர்கள்.

இவர்களின் பாடல்களை மேடைகளில் எஸ். எஸ் விஸ்வநாததாஸ், எம். பி. அப்துல்காதர், எஸ் ஜி. கிட்டப்பா, கே. பி. சுந்தராம்பாள், எம். எஸ். சுப்புலெட்சுமி, பி. யு. சின்னப்பா, டி. எம். காதர்பாட்சா போன்ற பாடகர்கள் பாடிப் பெருமை பெற்றனர்.

1931 முதல் 1946 வரை ஔவை டி. கே. சண்முகம் நடித்த 'தேச பக்தி' நாடகம் பல்லாயிரக்கணக்கான இளை-ஞர்களை விடுதலைப் பணியில் குதிக்கச்செய்தது.

இந்திய விடுதலைப் போர் வரலாற்றில் இந் நாடகக் கலைஞர்களின் பங்கு மகத்தானது.

இவ்வாறு நாடக மேடையைப் பயன்படுத்தித் தன் உடல் பொருள் ஆவி இம் மூன்றையும் நாட்டுக்காக அர்ப்ப-ணித்து நம்மை ஆண்டுவந்த வெள்ளையர்களைத் துச்சமெனக் கருதிப் பாடல்கள் மூலம் நாட்டு மக்களுக்கு விடுதலை உணர்வை ஊட்டி இந்திய சுதந்திர வரலாற்றில் நிலைத்த இடம் பிடித்த நாடகக் கலைஞர்தான் அமரர் தியாகி எஸ். எஸ். விஸ்வநாததாஸ் அவர்கள்.



## 2. முத்தமிழ் சுமந்து விஸ்வநாததாஸ் பிறந்தார்

| விதையினைத் தெரிந்தெடு – பாரதியின் ஆத்திசூடி |
|---|

இன்றைய காமராசர் மாவட்டம் சிவகாசியில் கி.பி. 1886-ஆம் ஆண்டு ஜுன் திங்கள் 16-ல் ஞானியார் தெருவில் மருத்துவத்தைப் பரம்பரைத் தொழிலாகக் கொண்ட மருத்துவ சமுதாயத்தைச் சேர்ந்த சுப்பிரமணியம்-ஞானம்மாள் தம்பதி-யருக்கு இரண்டாவது மகனாகப் பிறந்தார். விஸ்வநாததாஸ். இவர் தந்தை சுப்பிரமணியம் இசை, நெசவு, மருத்துவம் இம் மூன்றையும் நன்கறிந்தவர். இவர் மனைவி ஞானம்மாள் மதுரை மாவட்டம் திருமங்கலத்தைச் சேர்ந்தவர். கருப்பசாமி, சண்முகதாஸ், குருவம்மாள், செந்தியம்மாள், பேச்சியம்மாள், ஆகிய ஐவரும் இவர்க்கு உடன் பிறப்புகள்.

விஸ்வநாததாஸ், இளமையில் தனது தாத்தாவுடன் திருமங்கலத்தில் வசித்து வந்தார். வீட்டிற்கு அருகிலுள்ள கோவிலில் ஒவ்வொரு சனிக்கிழமையும் தாசரதிகள் காலில் சலங்கை, கையில் சப்ளாக்கட்டையோடு மத்தளம் அடித்துத் தாளம் தட்டிக் குதித்துக் குதித்துக் கோவிந்த திருப்பெயர் சரவடியைப்பாடுவர். இதைக் காண ஊர்மக்கள் நிறைய வந்து கூடுவர். சிறுவன் விஸ்வநாததாசும் தவறாமல் அங்குச் சென்று பாடல்களைக் கேட்பதுண்டு. பின்னர் அவர்களோடு சேர்ந்து பாடவும் செய்தார். எனவே அத்தனை திருப்பெயர் சரவடியும் இவருக்கு மனப்பாடமாயின.

சலங்கை கட்டி ஆடும் தாசரதிகள் வரத்தவறினால் சிறுவன் விஸ்வநாததாஸ் சலங்கை கட்டிக்கொண்டு கூச்ச-மில்லாமல் தாளத்தோடு பாடிக்குதித்துக் குதித்து ஆடுவார். வழிபாட்டுக் குழுவினரும் ஊராரும்வியந்து சிறுவனைப் பாராட்டுவர். இவரைத் 'தாசரிதாஸ்' எனவும் செல்லமாக அழைத்து வந்தனர்.

பின்னர் சிவகாசி வந்து தனது பெற்றோருடன் வசித்து வந்தார். இளமையில் அங்கு ஒரு திண்ணைப் பள்ளிக்கூடத்தில் சேர்க்கப்பட்டார். ஆனாலும் படிப்பில் இவருக்கு நாட்டமில்லை. சிவகாசி மற்றும் சுற்றுப்புற ஊர்களில் தெருக் கூத்துகள் நடந்தால் விஸ்வநாத தாஸ் தவறாமல் செல்வார். அக்கூத்துகளை நன்றாகச் சுவைப்பார். கூத்துகளில் நடிகர்கள் பேசும் உரையாடல், பாடல்களை அப்படியே வீட்டிலும், மற்றவர்களிடமும் பாடிப், பேசி நடித்துக்காட்டுவார்.

மகனின் இம்மாதிரியான நடவடிக்கைகள் தந்தை சுப்பிரமணியத்துக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. தமது குலத்தொழிலைச் செய்யும்படி அறிவுரை கூறினார்; கண்டித்தும் பார்த்தார். இது தொடர்பாக இவரது அப்பாவுக்கும் அம்மாவுக்கும்கூடத்தகராறு வரும். அப்பா வீட்டில் இல்லாத சமயம் பார்த்துத்தான் சாப்பிடச் செல்வார். அம்மாவுக்கு மகனிடம் பாசம் மிகுதி. தலையைத்தடவிக் கொண்டே மகனிடம் ''அப்பா சொல்றதக் கேட்டு நடப்பா'' என்று செல்லமாகக் கடிந்து கொள்வார். ஆனாலும் மழுப்பலாகப் பதில் கூறிவிட்டு மறைந்து விடுவார் தாஸ். அப்பாவுக்கு இவரைக் கண்டாலே பிடிக்காது.

சிறுவன் விஸ்வநாத தாசிடம் அமையப் பெற்றிருந்த இந்த அற்புத ஆற்றலைக் கண்டு வியந்த சிவகாசி தோல் மண்டி உரிமையாளர் தொந்தியப்ப நாடார் அவர்கள் விஸ்வநாத தாசுக்கு வழிமுறைகளோடு பாடவும் நாடகங்களில் நடிக்கவும் பயிற்சிகள் அளித்தார். அவரால் அளிக்கப்பட்ட அப்பயிற்சிகளைத் தாசும் விரைவிலே கற்றுத் தேர்ந்தார்.

தந்தையால் புரிந்து கொள்ளப்படாமல் இருந்த சிறப்புகள் குடும்பத்திற்கு வெளியே உள்ள சிறந்த மனிதர் ஒருவரால் கண்டு கொள்ளப்பட்டுக் கூர் செய்யப்பட்ட நிகழ்ச்சி சிறுவன் விஸ்வநாத தாசுக்குக் கிடைத்த முதல் வெற்றி. இவரது கலையுலக நுழைவுக்கு இதுவே பாதையமைத்துக் கொடுத்தது என்றாலும் அது மிகையாகாது.

## 3. போராட்டக்களத்தில்......

''கொடுமையை எதிர்த்து நில் – பாரதியின்ஆத்திசூடி

சிறுவன் விஸ்வநாத தாஸ் இளமையிலேயே துடுக்குத் தனம் மிகுந்தவராக இருந்தார். எங்காவது விழா நடப்ப-தாயிருந்தால் அங்கே அவரைக் காணலாம். அதுவும் கோவில் கொடையென்று வந்து விட்டால் அவருக்கு உற்சாகம் கரைபுரண்டோடும். அப்படிப்பட்ட நேரங்களில் நண்பர்கள் கூட்டம் அவரைச் சூழ்ந்து கொள்ளும். தாசோடு நாமிருந்தால் மகிழ்ச்சியோடு நிகழ்ச்சிகளைக் கண்டு களிக்கலாம்; தவிரவும் அவருடைய ஆடல்பாடல்களையும் கேட்டு மகிழலாம் என அவருடைய நண்பர்கள் அவரைச் சுற்றிக் கொண்டிருப்பர்.

அன்று சிவகாசியிலுள்ள பத்திரகாளியம்மன் கோவி-லில் தேர்த்திருவிழா; அம்மன் வீதிப்புறப்பாட்டிற்காகத் தேரடி முக்கில் இருந்த தேரை நண்பர்களுடன் வேடிக்கை பார்க்கச் சென்றார் தாஸ். அங்கே கூடியிருந்த பிற நண்பர்கள் மற்றும் சிறுவர்கள் ஊட்டிய உற்சாகத்தில் அணிசெய்யப்பட்ட தேரின் மேலேறி நின்று பாட ஆரம்பித்துவிட்டார் தாஸ். இவரது பாடலைக் கேட்க ஆட்கள் நிறையக் கூடிவிட்டனர்.

தற்செயலாகக் கூட்டத்தை எட்டிப்பார்த்த தந்தை சுப்-பிரமணியம், தன் மகன் அம்மன் தேரின் மீது ஏறிப்பாடுவ தைக்கண்டு திடுக்கிட்டார். கோபத்தோடு மகனை நோக்கிப் போனார். தகப்பனார் கோபத்தோடு தன்னை நோக்கி வரு வதைக் கண்டு பயந்து விஸ்வநாததாஸ் தப்பி ஓட முயன்-றார். ஆனாலும் தகப்பனார் மகனைப் பிடித்துப் பலமாக அடித்தார். ''பாவிப்பயலே...மொதலாளிமார் ஏறுற தேர்ல...

நீ ஏன்டா ஏறின... நாமெல்லா... கீழ்ச்சாதிக் காரங்கல்ல... இனிமே இப்படி ஏறுவியா......ஏறுவியா'' என்று சொல்லிக்-கொண்டே அடித்தார்.

இதற்குள் அங்கு வந்த பூசாரியிடம் சுப்பிரமணியம் ''சாமி...மன்னிச்சுக்கோங்க...கோயில்... தேர்ல ஏ...மகன் தெரியாம ஏறிட்டான்...தேரு தீட்டாகிப்போச்சு...அதுக்கு ஏதாவது பரிகாரம் செய்யனுமா சாமி'' எனக்கூறி மகனின் முதுகில் மேலும் மேலும் அறைந்தார்.

சிறுவன் விஸ்வநாததாசும் அழுதுகொண்டே ''தேர் மேலே நான் ஏர்னதால தேரே கெட்டுப்போச்சாம்......ஆனா எங்க ஆட்க தேர்மேலே ஏறித்தான நாதஸ்வரம் வாசிக்றாங்க...அப்போ...தேர் தீட்டுப்படாதோ?'' எனக் கேட்டார்.

இதைக்கேட்டதும் மேலும் கோபம் ஏற்பட்டு மகனை அடிக்க மீண்டும் கையைஓங்கிய தகப்பனாரைக் கோவில் பூசாரி தடுத்து ''சுப்ரமணியம்...ஒம் பையன் சொல்றதிலேயும் தப்-பில்ல...அவங் கேள்வியிலயும் தப்பில்லே'' என்றார். மேலும் ''ரொம்ப அறிவுள்ள பயலா இருக்கான், எதிர் காலத்தில நல்லபடியா வருவான். இனிமே அவன அடிக்காதே'' என்று சமாதானப்படுத்தினார். சிறுவன் விஸ்வநாததாஸ் கேட்ட கேள்வி அங்கிருந்தவர்களைச் சிந்திக்கச் செய்தது.

''எனது மதிப்பாண்மையே எனது உயிர் இரண்டும் ஒன்றியே வளர்கின்றன. தன் மதிப்பை இழந்துவிட்டால் என் வாழ்க்கை முடிந்துவிடும்'' என்றான் சேக்ஸ்பியர் இந்தச்சீரிய உண்மை விஸ்வநாததாசின் வாழ்க்கையின் குறிக்கோளாக இலங்கியதை எண்ணி வியப்படைகிறோம்.

★ ★ ★

# 4. புகழ் பூத்த இல்லறம்

| |
|---|
| **யௌவனம் காத்தல் செய்—பாரதியின் ஆத்திசூடி** |

தொந்தியப்ப நாடாரால் நன்கு பயிற்றுவிக்கப்பட்டவிஸ்வநாததாஸ் தெருச் சந்திப்புகளில் பாடுவதோடு தெருக் கூத்துகளிலும் சிறு சிறு வேடங்களில் நடிக்கவும் செய்தார். பின்பு நாடகக்குழுவினர் நடத்தும் நாடகங்களில் விஸ்வநாததாஸ் முதலில் பெண் வேடங்களில் நடித்தார். தம் குரலின் இனிமை முகமதி காரணமாகப் பெண்களைவிட மிக அழகாகவே பல நாடகங்களில் நடித்துவந்தார். ஆனால் இவரது 16 ஆம் வயதில் குரலில் மகரக் கட்டு வந்தது.

பேச்சு, பாட்டு இவற்றிலும் முகத்திலும் மாறுதல்கள் ஏற்பட்டன. இதனால் இவர் நாடகங்களில் பெண் வேடங்களில் நடிப்பதை விட்டு விட்டு ஆண் வேடங்களில் நடிக்க ஆரம்பித்தார். நல்ல உடற்கட்டும் இனிமையான குரல் வளமும் கொண்ட தாஸ் நாடக மேடையில் புராண நாடகங்களில் 'ராஜபார்ட்' ஆக நடிக்க ஆரம்பித்தார்.

அந் நாளில் சில நாடகக்குழுவினர் தாங்கள் நடத்தும் நாடகங்களில் வசூலை அதிகரிக்கச் சில குடும்பப் பெண்களைத் தயார் செய்து பெண் வேடங்களில் பெண்களையே நடிக்க ஏற்பாடு செய்தனர்.

தன் மகன் நாடகங்களில் பெண்களுடன் சேர்ந்து நடிப்பதைக் கண்ட தந்தை சுப்பிரமணியம் தன் மகன் கெட்டுப்போவான் என்று கருதி விஸ்வநாததாசின் திருமணத்திற்கு ஏற்பாடு செய்தார்.

இன்றைய சிதம்பரனார் மாவட்டம் கீழஈரால் நல்ல மாடசாமி புதல்வியான சண்முகத்தாயைத் தாசுக்குத் திருமணம் செய்துவைத்தார். அப்போது இவருக்கு வயது 20 இவர் மனைவிக்கு வயது 15.

விஸ்வநாததாஸ்—சண்முகத்தாய் இணைந்த இல்லறம் நல்லறமாய் நடந்தது. குழந்தைச் செல்வங்களுடன் குதூகலமாய் வாழ்ந்துவந்தனர். கணவருடன் கருத்தொருமித்துப்பாடலுக்கேற்ற இசையாய் வாழ்ந்து வந்தார் சண்முகத்தாய்.



## 5. திருப்புமுனை

| தேசத்தைக் காத்தல் செய் - பாரதியின் ஆத்திசூடி |
|---|

புராண நாடகங்களில் நடித்துத் தெய்வங்களைக் குறித்துப் பாட்டுப்பாடிப் பேரோடும் புகழோடும் வாழ்ந்து கொண்டிருந்த வேளையில் 1911-ல் மகாத்மா காந்தியடிகள் தூத்துக்குடி வருகை தந்தார்கள். மகாத்மா காந்தியடிகள் கலந்து கொண்ட அம்மேடையில் பாடுமாறு தாசைக் கேட்டுக் கொண்டனர்.

தாசின் குரல் இனிமையைக் கேட்டு மக்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர். காந்தியடிகளும் இவர் பாடிய பாடலைக் கேட்டு மகிழ்ந்தார். காத்தியடிகளிடம் தாசை அறிமுகப் படுத்தி வைத்தார்கள். அவரைப் பாராட்டிய காந்தி மகான். தாசிடம் தங்களுடைய இசைத்திறனை நாட்டு விடுதலைக்குப் பயன் படுத்துமாறு கேட்டுக்கொண்டார்.

அந்நாளில் சுதந்திரப் போராட்டம் உச்ச நிலையில் இருந்தது. ''வந்தே மாதரம் ... பாரத மாதாவுக்கு ஜே! ...... ஆங்கில ஆட்சி ஒழிக'' என்னும் முழக்கங்கள் நாடெங்கும் எதிரொலித்தன.

மகாத்மா காந்தியின்பால் மட்டற்ற அன்பும் நாட்டின் விடுதலையில் மிகுந்த ஆர்வமும் கொண்டிருந்த தாசின் மனதில் இவ் வேண்டுகோள் ஆழமாகப் பதிந்தது. அவர் மனதில் ஏற்கனவே கனன்று கொண்டிருந்த சுதந்திரக் கனலைச் சுடர் விட்டு எரியச் செய்தது.

இதுவரை விலையுயர்ந்த பட்டாடைகள் அணிந்து வந்த தாஸ் அன்று முதல் கதர் கட்டத் தீர்மானித்தார். ஆங்கில ஆட்சிக்கு எதிராக நாடக மேடைகளில் பாடல்களைப் பாட வேண்டும் என்ற எண்ணம் இவருக்கு ஏற்பட்டது. அரிச் சந்திரன், வள்ளி திருமணம், கோவலன், நல்ல தங்காள் போன்ற நாடகங்களில் வரும் பாடல்களினிடையே ஆங்கில ஆட்சியை எதிர்த்தும் தாக்கியும் பாடல்கள் பாடினார். இப்பாடல்கள்மக்களிடையே நல்ல வரவேற்பைப் பெற்றன.



# 6. ஆண்டவனும் ஆள்பவனைப் பேசினான்

குன்றென நிமிர்ந்து நில்—பாரதியின் ஆத்திசூடி,

இவர் நடத்திய நாடகங்களுள் மிக முக்கியமானது வள்ளி திருமணம் நாடகமாகும். வள்ளி திருமணம் நாடகத்தில் வள்ளியாக நடிக்கும் பெண் தானிய கதிர்களைத் தின்னக் வரும் பறவைகளை விரட்டக் கவண் கல் எறியும்போது ஆலோலம் பாடுவாள். அப்போது வேடனாக நடிக்கும் விஸ்வநாததாஸ் தானும் பறவைகளை ஓட்டுவதற்காக அதே ஆலோலப் பாடலில் வரும் முதலிரண்டு அடிகளைமட்டும் பாடி விட்டுத் திடீரென்று

"கொக்குப்பறக்குதடி பாப்பா - நீயும்
கோபமின்றிக் கூப்பிடடி பாப்பா
கொக்கென்றால் கொக்கு அது நம்மைக்
கொல்ல வந்த கொக்கு
எக்காளம் போட்டு நாளும் இங்கே
ஏய்த்துப் பிழைக்குதடி பாப்பா
வர்த்தகம் செய்ய வந்த கொக்கு – நமது
வாழ்வைக் கெடுக்க வந்த கொக்கு."

எனக் கணீரென்று தாக்கிப்பாடுவார். அப்பாடலைக் கேட்டதுமே நாடகம் பார்ப்போரின் ஆர்ப்பாட்டப் போர்ப் பாட்டு முழங்கும்.

விஸ்வநாத தாஸ் தொடர்ந்து பல நாடகங்களில் "கதர்க்கப்பல் கொடி தோணுதே, கரும்புத் தோட்டத்திலே, போலீஸ் புலிக் கூட்டம் நம்மீது போட்டு வருது கணோட்டம், பஞ்சாப் படுகொலை பாரில் கொடிது, தேசாபிமானிகளே உண்மைத் தெய்வீக ஞானிகளே, கெருவம் மிகுந்த நீலன்" போன்ற பல பாடல்களைப்பாடி ஆங்கில ஆட்சியாளர்களை எதிர்த்து முழக்கமிட்டார். விடுதலை வேள்வியில் மக்கள் குதிக்க வழிகாட்டியாக அமைந்தன இவரது இப்பாடல்கள்.

# 7. ஜாதி நெருப்பில் ......

| சிறுவோர்ச் சிறு – பாரதியின் ஆத்திசூடி |
|---|

அந்த நாட்களில் நாடகக் கம்பெனிகளில் நடிகைகளுக்குக் குறைவான ஊதியமே தந்து வந்தனர். இதனால் அந்த நடிகைகளுள் சிலர் கூடுதல் சம்பளம் பெறுவதற்காக ஒரு சதித்திட்டத்தைக் கொண்டு வந்தனர். நடிகர் விஸ்வநாத தாஸ் மருத்துவகுலத்தில் பிறந்தவரானதால் அவருடன் நாங்கள் இணைந்து நடிக்கவேண்டுமானால் தங்களுக்கு அதிக ஊதியம் தரவேண்டுமெனத் தங்கள் திட்டத்தை வெளியிட்டனர்

இச் செய்தி விஸ்வநாததாசுக்கு எட்டியது. உடனே இவர் தான் நடிக்கும் நாடகங்களில் பெண்களே தேவையில்லை. பழையபடி ஆண்களையே பெண் வேடங்களில் நடிக்கச் செய்யலாம் என்றதும் நாடகக் குழுவினரும் இதற்கு இசைவளித்தனர்.

உடனே பெண்நடிகைகளும் தங்கள் தவறை உணர்ந்து எவ்வித நிபந்தனையும் இன்றி விஸ்வநாத தாசுடன் இணைந்து நடிக்க முன்வந்தனர்.

இந்தச் சம்பவத்தைச் சுட்டிக்காட்டும் விதத்தில் வள்ளி திருமணம் நாடகத்தில் குறவர்குலப் பெண்ணாகிய வள்ளியை முருகன் வேடத்திலுள்ள விஸ்வநாததாஸ் கரம் பிடித்துத்

"தாழ்த்தப்பட்ட சோதரரைத்
தாங்கு வாருண்டோ?
தாங்கு வாருண்டோ? - மண்ணில்
ஏங்கு வாருண்டோ?"

என்ற பாடலை மனக்குமுறலோடு பாடினார். இதைக் கேட்டதும் பொதுமக்கள் அனைவருமே கண்ணீர் விட்டு அழுதனர். அவர் வாழ்க்கை பன்னீர்க்குளியல் என்பதை விடக் **கண்ணீர்க் குளியல்** என்பதே நமக்கு உள்ளத்தைச் சுடும் வரலாறாகும்.

## 8. போடாதே! போடாதே! நாடகம் போடாதே!

| செய்வது துணிந்து செய் – பாரதியின் ஆத்திசூடி |
|---|

காந்தியடிகளின் அன்பு வேண்டு கோளுக்கிணங்கிப் புராண நாடகங்களில் நாட்டுப்பற்றை உணர்த்தும் பாடல்கள் பாடத்தொடங்கியதும் இவரது நாடகங்களுக்கு ஒரு தனிச் சிறப்பும் சீர்மையும் ஏற்பட்டன. விஸ்வநாததாசின் நடிப்பைக் காணவும் பாடலைக் கேட்கவும் வழக்கமாகக் கூடுகிற கூட்டம், தேச விடுதலைக்காகவும் பாடத்தொடங்கி விட்டார் என்பதைத் தெரிந்ததும் பெருங்கூட்டமாகக் கூடத்தொடங்கியது.

ஊர் தோறும் நாடகம் நடக்கும். மேடை தோறும் அவருடைய தேசியப்பாடல் இருக்கும். புரட்சிக் கருத்துகளைக் கொண்ட விஸ்வநாத தாசின் பாடல்கள் ஆட்சியாளர்கள் வரை எட்டின.

'விஸ்வநாததாஸ் இனி ஆங்கிலேயர்களைத் தாக்கியோ விடுதலை பற்றியோ எந்தப் பாடலையும் பாடக் கூடாது' எனத் தடையாணை பிறப்பித்தது வெள்ளை அரசு. ஆனாலும் அவ்வாணையைப் புறக்கணித்தார், தாஸ்.

நாடகமேடைகளில் ஆங்கில ஆட்சியாளர்களை எதிர்த்து இவர் பாடிய பாடல்களை மீண்டும் மீண்டும், கேட்டுக் கேட்டு மக்கள் ஆரவாரம் செய்தனர். நாட்டு விடுதலையை உயரிய கொள்கையெனக் கொண்டு பணியாற்றத் தொடங்கிய பிறகுதான் துன்பங்களும் துயரங்களும் அவரைச் சூழத் தொடங்கின.

இலட்சியங்களை ஏந்திக்கொண்டிருக்கும் இதயங்களால் மட்டுமே, இன்னல்களைத் தாங்கிக் கொண்டு போராட முடியும்.

'உள்ள உயிர் ஒன்றுதான். அதுபோகப் போவதும் ஒரு முறைதான். அதுவும் கொண்ட கொள்கைக்காகப் போகட்டுமே' என்று நினைத்தார். இறுதிவரை போராடினார் விடுதலை பெற்ற நாளில் மட்டும் இவரிருந்திருந்தால் பாரத அன்னை தன் மகனை உச்சி முகர்ந்து போற்றியிருப்பாள்.

# 9. முருகப்பெருமானும், தாகமும்

சிதையா நெஞ்சு கொள் - பாரதியின் ஆத்திசூடி

நெல்லை கணபதி அரங்கில் வள்ளி திருமணம் நாடகத்திற்கு ஏற்பாடாகியிருந்தது. வழக்கம் போல் காவல் துறை அதிகாரிகள் கையில் பிடியாணையுடன் வந்திருந்தனர்.

தன்னைச் சிறைப்படுத்தக் காவல்துறை வந்திருப்பதை அறிந்த விஸ்வநாத தாஸ் சிறிதும் அஞ்சவில்லை. நாடகத்தில் பறவைகளை விரட்ட வள்ளி ஆலோலம் பாடி முடிப்பதற்குள் வேடன் வேடத்தில் வந்த விஸ்வநாததாஸ் ''கொக்குப் பறக்குதடி பாப்பா - நீயும் கோபமின்றிக் கூப்பிடடி பாப்பா'' எனக் கணீரென்று பாடினார். இடி முழக்கமென அரங்கமே அதிர்ந்தது. கொட்டகைக்குள் நாடகம் பார்த்துக் கொண்டிருந்த காவல்துறை அதிகாரி வேகமாக மேடைக்குச் சென்று ''ஆங்கில ஆட்சிக்கு எதிராகப் பாட்டுப் பாடியதால் உங்களைக் கைது செய்ய வந்துள்ளோம். பிடியுங்கள் வாரண்டை'' என்றார்.

''யாருக்கு வாரண்டு?

விஸ்வநாததாஸ் என்பவரான உங்களைக் கைது செய்யவே வாரண்டு''

''அடடா ... ... ... அப்படியா இப்போது நான் அந்த விஸ்வநாததாஸ் இல்லை. நான் முருகன். வேடன் ரூபத்தில் வந்திருக்கிறேன். முருகப்பெருமானைக் கைது செய்ய அவர் பெயருக்கு வாரண்டு இருந்தால் கொண்டு வாருங்கள். இல்லையேல் நாடகம் முடிந்து வேடத்தைக் கலைத்ததும் வந்து கைது செய்யுங்கள். அது வரை அமைதியாக இருந்து நாடகத்தைப் பாருங்கள்'' என்றார். பதில் கூற முடியாமல் காவல்துறை அதிகாரி தன் இருப்பிடத்திற்குச் சென்றார்.

அதே காவல்துறை அதிகாரி நாடகம் முடிந்ததும் முருகன் வேடத்தைக் கலைத்து விட்டு வந்த விஸ்வநாத தாசிடம் அதே பிடியாணையை நீட்டிய போது ''நான் எப்பொழுது ஆட்சியாளர்களை எதிர்த்துப் பாடினேன்?'' எனக் கேட்டார். அதற்குக் காவல்துறை அதிகாரி ''நீங்கள் தானே முருகக்கடவுளாக வேடன் ரூபத்தில் வந்து பாடினீர்கள்'' என்றார்.

''என்ன கொடுமை! நாடகத்தில் முருகப்பெருமான் வேடனாக வந்து பாடியதற்கு விஸ்வநாததாஸ் பெயருக்கு வாரண்டா? வேடத்தைக் கலைத்து விட்டு இப்போது நான் விஸ்வநாததாசாக இருக்கும் போது முருகப்பெருமானாக வந்து பாடிய பாட்டிற்காக என்னைக் கைது செய்வது எப்படிச் சரியாகும்? சட்டம் தெரியாமல் ஆட்சி செய்வதுதான் உங்கள் நீதியா?'' எனக் கேட்டார்.

என்றாலும் காவலர்கள் விடவில்லை. கைது செய்து வழக்குத் தொடர்ந்தனர். அந்த வழக்கில் இவருக்கு ஓராண்டு சிறைத் தண்டனை வழங்கப்பட்டது. வேலூர்ச் சிறையில் அடைக்கப்பட்டார்.

''கடமை, தியாகம், நாட்டுப்பற்று இம் மூன்றும் நாட்டின் முன்னேற்றத்திற்கு ஏற்ற வழிகளாம். இம்மூன்றும் தனிமனிதனிடத்தோ, சமுதாயத்தினிடத்தோ காணப்படின் அவனையும் அச்சமுதாயத்தையும் வெல்ல எத்துணைபலமுள்ள படையாலும் முடியாது'' - என்ற புரட்சி வீரன் மாஜினியின் முழக்கம் இந்த விடுதலை வீரர் விஸ்வநாததாசுக்கு முற்றுமாகப் பொருந்துகிறது. ''மாங்குயில் கூவிடும் பூஞ்சோலை எம்மை மாட்ட நினைக்கும் சிறைச்சாலை'' என்ற பாவேந்தரின் அடிகள்தாம் நம் நினைவுக்கு வருகிறது.

# 10. குயிலுக்குக் கிளியின் போர்ப்பரணி

ஞேயம் காத்தல்செய் – பாரதியின் ஆத்திசூடி.

கணபதி அரங்க நிகழ்ச்சிக்குப் பிறகு காவல்துறை முன்னெச்சரிக்கையாக எல்லாவித ஏற்பாடுகளுடனும் வந்து விஸ்வநாத தாசைப் பலமுறை கைது செய்தனர்.

விஸ்வநாததாசின் நாடகம் மாலையில் நடக்கும்; இரவில் இவர் கைது செய்யப்படுவார். மறுநாள் நீதி மன்றத்தில் நிறுத்தப்படுவார். அபராதத்திற்குமேல் அபராதம் விதிக்கப்படும். அபராதத்தைக் கட்டாமலே சிறைக்குச் செல்வார். ஆனால் இவர் நண்பர்களோ அபராதத் தொகையைக் கட்டி இவரை மீட்டுவருவார்கள். ஒருநாள் நாடகம்; ஆறு மாதம் சிறையென்று இவர் வாழ்க்கை தொடர்ந்தது. அடிக்கடி இவர்மீது அரசத்துரோக வழக்குகள் தொடரப்பட்டன.

ஒரு சமயம் விஸ்வநாததாஸ் மீது அரசத்துரோகக் குற்றம் சாட்டித் திருநெல்வேலி மாவட்ட நீதிபதிமுன் வழக்கு ஒன்று நடந்தது. தாசுக்காக வழக்காடச் செக்கிழுத்த செம்மல் கப்பல் ஓட்டிய தமிழன் வ.உ. சிதம்பரம் அவர்கள் வந்திருந்தார். எல்லாவற்றையும் இழந்து விட்டுத் தாசின் நிலைக்கே அவரும் தாழ்ந்து விட்டநேரம்.

கூவ முடியாத குயிலுக்காகப் பச்சைக்கிளி பரிந்து பேசிய காட்சியாக அந்நிகழ்ச்சியை நாடு மகிழ்ச்சியுடன் பார்த்துப் பாராட்டியது.

x

# 11. நாடகத்துக்குள் ஒரு நாடகம்

நினைப்பது முடியும் — பாரதியின் ஆத்திசூடி

1932-ம் ஆண்டு நாடு முழுவதும் விடுதலைப் போரினைக் காங்கிரஸ் பேரியக்கம் தீவிரமாக நடத்திக் கொண்டிருந்தது. வெள்ளை அரசாங்கம் தனது அடக்கு முறைகளைக் கட்டவிழ்த்து விட்டு ஆர்ப்பாட்டம் செய்து கொண்டிருந்தது. மேடைக்கு வரும் முன்பாகவே விஸ்வநாத தாசைக் கைது செய்துவிட வேண்டுமென்று காவல் துறை திட்டமிட்டது.

அவர் எங்கே இருக்கிறாரென்று தெரியாமல் காவலர் திண்டாடினர். இரவு வந்தது; நாடக அரங்கு நிறையத் தொடங்கியது. அவரைக் கைது செய்வதற்குக் காவலர் விழிப் போடு காத்து நின்றனர்.

விஸ்வநாததாசின் தம்பியான சண்முகதாஸ் ஆர்மோனியத்தோடு மேடையில் அமர்ந்ததும், ''விஸ்வநாத தாஸ் எப்படியும் வந்துவிடுவார். அவர் வருகையைத்தான் எதிர் பார்த்துக்கொண்டிருந்தோம். நேரமும் அதிகமாகிக் கொண்டு வருவதால் தாசின் மகன் சுப்பிரமணியதாஸ் நடிப்பார். அனைவரும் அமைதியாக இருந்து ஆதரவு தரவேண்டுகிறோம்.'' என்று கூறி மக்களை நம்பச் செய்தார். காவல் துறையினரும் 'தலைவலி விட்டது' என நிறைவடைந்தனர்.

தாசின் மேக்கப் பெட்டியைத் தூக்கிக்கொண்டு ஒரு கூலிக்காரன் காவலர்களுக்கிடையே புகுந்து வந்தான். நாடகம் தொடங்கியது.

வள்ளி திருமணம் நாடகத்தில் வேலனின் உரையாடலையும் பாட்டையும் கேட்ட மக்கள் 'தந்தையைப் போலவே மகனுமிருக்கிறானே' என ஆச்சரியப்பட்டனர். அடுத்து வள்ளியைச் சிறையெடுக்க முருகப்பெருமான் வேடனாக வரவேண்டும் ... ... ...

வேடன் வந்தான். அதில் தான் பேச வேண்டிய உரையாடல், பாடலைப்பாடினான். திடீரென்று தேசியப் பாடல்களைப் பாடத்தொடங்கினான். அவ்வளவு தான் ...... அரங்கமே அதிரும்படிக் கையொலி எழும்பியது.

காவலர் குழம்பிவிட்டனர். பாடுவது தாசா? அவருடைய மகனா? என மக்கள் புருவத்தை உயர்த்தினர். ஒருவருக் கொருவர் விசாரித்துக் கொண்டனர். மக்களின் குசு குசு பேச்சை உன்னிப்பாகக் கேட்ட காவலர்கள் உறுதி செய்து கொண்டு தாசைக் கைது செய்தனர்.

அதன்பிறகுதான் கூலிக்காரன் போல் பெட்டியைத் தூக்கிக் கொண்டு காவல் வளையத்துக்குள் புகுந்து வந்தது தாசென்று மக்கள் புரிந்து கொண்டனர்.

''நீங்கள் உங்களால் முடிந்தவரையில் துன்பம் விளையாமல் தடுத்துக் கொள்ள முயல்வதும், தடுக்க முடியாத துன்பத்தைக் கூடிய மட்டும் பயன்படுத்திக் கொள்வதும் அறிவால் தான்'' என்ற பேரறிஞன் ரஸ்கினின் பொன் மொழி இங்கே எண்ணிப் பார்க்கத் தக்கதாகும்.



## 12. ஈழ மண்ணில் சூழ்ந்த நெருக்கடி

''சிங்களத்தீவினுக்கோர் பாலம் அமைப்போம் – பாரதி''

தமிழகத்தைப் போலவே இலங்கையிலும் விஸ்வநாத தாசுக்குப் பெரிய அளவில் செல்வாக்கும் புகழுமிருந்தது. அப்பொழுது நேரு பெருமகன் இந்திய தேசிய காங்கிரசின் தலைவராயிருந்தார். அவர் தமது கட்சியின் பிரச்சாரத்திற்காக இலங்கை சென்றார். அதே கப்பலில் தான் விஸ்வநாததாசும் தம் குழுவினரோடு இலங்கை சென்றார்.

நேரு பெருமகன் பயணம் செய்த அக் கப்பல் தலைமன்னார் போய்ச் சேர்ந்தது. இலங்கை கப்பல் துறையினர் கப்பலைச் சுற்றி வளைத்தனர். விஸ்வநாத தாசை நோக்கி ''நீங்கள் கப்பலை விட்டுக் கீழே இறங்கக்கூடாது. இந்த மண்ணில் உங்கள் கால்படுவதற்கு இலங்கை அரசு தடை விதித்திருக்கிறது இதோ பாருங்கள்'' எனத் தடையாணையைக் காட்டினர்.

''நேரு பெருமகன் வருகிறார்களே! அவர் என் தலைவர். நான் வரக்கூடாதா? நான் அவரின் தொண்டன் தான்'' எனத் தாஸ் சொன்னார். ''அவர் வருவதைப் பற்றிப் பிரச்சனையில்லை. நீங்கள் வந்தால் கொந்தளிப்பு ஏற்படும்; குழப்ப முண்டாகும். வன்முறை கூட ஏற்படலாம். எனவே தான் இலங்கையரசு உங்களுக்குத் தடை விதித்திருக்கிறது'' எனக் காவலதிகாரி தனது பிடியில் உறுதியாயிருந்தார்.

தலைமன்னார் வரை சென்ற தாசைத் தமிழ்நாட்டுக்குத் திருப்பியனுப்பி விட்டது இலங்கை அரசு. இதையறிந்த இலங்கை காங்கிரஸ் தலைவர் ஜே. பி. கிறிஸ்டீனும் மேயர் குணசிங்கும் வழக்காடி வெற்றி பெற்றுத் தாசை இலங்கைக்கு அழைத்தனர்; மிகப்பெரிய வரவேற்பும் கொடுத்தனர்.

சிங்களத்தீவு முழுவதும் சுற்றி விடுதலை முழக்கத்தைச் சிங்கமென முழக்கித் திரும்பினார்.

தவிரவும் சிங்கப்பூர், மலேசியா, பர்மா ஆகிய நாடுகளிலும் இவரது சண்முகானந்தா நாடகக்குழு சென்று இந்திய சுதந்திரப் போராட்டப் பாடல்களை இசைத்துவந்தது

அந்த நாடக வண்ணத்து பூச்சி தன் தோட்டம் மட்டுமின்றிப் பக்கத்துத் தோட்டங்களிலும் சிறகடித்துப் பறந்து தன் அழகைப் பரிமாறியது.



---

அமரர் விஸ்வநாததாஸ் மிகவும் பிற்படுத்தப்பட்ட மருத்துவ சமுதாயத்தில் பிறந்ததால் அந்தக் காலத்தில் அவரோடு இணைந்து நடிக்க நடிகைகள் மறுத்தனர். ஆனாலும் பிராமண குலத்தைச் சேர்ந்த முத்துலட்சுமி அம்மையார் அவரோடு இணைந்து நடித்தார். எல்லா நேரத்திலும் எல்லா இடத்திலும் தாசுக்குத் துணையாக அந்த அம்மையார் இருப்பார்.

'பிராமண குலத்தில் பிறந்த பெண்ணே தாசுடன் இணைந்து நடிக்கும் போது நாம் அவரோடு நடித்தால் தவறு என்ன?' என்ற எண்ணத்தில்தான் மற்ற நடிகைகள் அவரோடு சேர்ந்து நடிக்க முன் வந்தனர். அப்படி முதன் முதலில் நடிக்க வந்த நடிகை எஸ். ஆர். கமலம்; அதன் பிறகு திருச்சி காந்திமதி, நெல்லை கிருஷ்ணவேணி போன்றவர்கள் அவரோடு நடிக்கத் தொடங்கினார்கள். பிற்காலத்தில் பிரபல கம்யூனிஸ்ட் தலைவியாகவும் சட்ட மன்ற உறுப்பினராகவும் இருந்த கே. பி. ஜானகியும் தாசுடன் கதாநாயகியாக இணைந்து நடித்திருக்கிறார்.

---

# 13. கல்லுக்குள் ஈரம்

பாட்டினில் அன்பு செய் – பாரதியின் ஆத்திசூடி

நெல்லை மாவட்டம் திருக்கறுங்குடியில் நாடகத்தில் நடிக்க விஸ்வநாததாஸ் வருகிறார் என்ற செய்தியறிந்ததும் இல்லாதோர் செம்மலாகவும், கொள்ளைக்காரனாகவும், விளங்கிய ஜெம்புலிங்கம் நாடகம் பார்க்க வருவதாகச் செய்தி சொல்லியனுப்பினார். சொல்லியது போலவே முன் வரிசை யிலும் அமர்ந்து விட்டார்.

அப்போது ஜெம்புலிங்கமோ தலைமறைவு வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருந்தார். எந்த நேரமும் அவர் காவலர் களால் பிடிபடலாம் என்ற நிலை.

தாசைப் பிடிப்பதற்காக நாடக அரங்கு முழுவதும் காவல்படை குவிந்திருந்தது. இந்த நிலையிலேயும் பயப்படாமல் நாடகம் காண வந்திருக்கும் ஜெம்புலிங்கத்தை மானசீகமாகப் போற்றினார் தாஸ்.

அந்த மேடையில் 'தேசாபிமானிகளே உண்மைத் தெய்வீக ஞானிகளே' என்று தொடங்கும் அந்தப்பாடலில்

''கூசாமல் மது வகையைக்
குடல் நிறையக் குடித்தோம்
கொடியருடன் கைகோத்துக்
குளிர் நிலவில் நடித்தோம்
நேசானு பூதி தெய்வ
நிந்தனையில் தடித்தோம்
நெஞ்சாரப் பொய்யுரைத்து
நீதி மன்றை யிடித்தோம்
கடைய ரென்றே நம்மில் சிலரைக்
கடிந்து விழுந்தடித்தோம்.''

என்ற பாடல் வரிகளை ஜெம்புலிங்கத்துக்காகவே பாடி 'உங்களுடைய திறமையை நாட்டு விடுதலைக்கு பயன் படுத்தக் கூடாதோ?' என்ற ஏக்கத்தை வெளிப்படுத்திப் பாடினார்.

தன்னைக் குறித்துத்தான் தாஸ் இவ்வாறு பாடுகிறார் என்பதைத் தெரிந்து கொண்ட ஜெம்புலிங்கம் மேடைக்குப் பின்புறமாகத்தாசை அழைத்தார். அவரைக் கட்டித்தழுவினார் நாத்தழு தழுக்க ''உங்கள் பாட்டு தேனாய் இனித்தது. என் நெஞ்சை நெகிழ வைத்து விட்டது. உங்கள் அறிவுரை நியாய மானது தான். ஆனால் என்னைப் பொறுத்த மட்டில் காலம் கடந்து விட்டது'' என்று கூறி விட்டு மறைந்து விட்டார்.

''இசையில் மயங்காதவன் கொலைகாரனாயிருப்பான்'' என்றான் ஷேக்ஸ்பியர். இசை வெறுப்பில் வாழும் ஔரங்க சீப்புகள் வாழும் இந்தச் சமுதாயத்தில், இசையே குழம்பிய மனத்திற்கு ஏற்ற மருந்து எனக் கருதி ஜெம்புலிங்கம் இவரது நாடகம் பார்க்க வந்தது நம்மைத் திகைக்க வைக்கிறது.



## 14. மாசுபட்ட ஓவியம்

| நோற்பது கைவிடேல் - பாரதியின் ஆத்திசூடி |
|---|

வெள்ளை அரசாங்கத்தின் கெடுபிடியால் தடையில்லாமல் நாடகங்கள் நடத்த முடியாது என்கிற நிலை, தாசுக்கு ஏற்பட்டது. முதல் நாள் நாடகம் நடத்தி விட்டு மாதக் கணக்கில் ஏன் ஆண்டுக் கணக்கிலும் கூடச் சிறையிலிருக்க வேண்டிய நிலை ஏற்பட்டு விட்டது.

பெற்றோர்கள் தேடி வைத்து விட்டுப் போன சொத்து கள் அனைத்தும் ஒன்றன் பின் ஒன்றாகக் குறையத் தொடங்கின. நீதி மன்றத்தில் வாதாடியே தனது குடுல்பச் சொத்துகளை இழந்தார். விஸ்வநாததாசின் குடும்பமோ பெரிய குடும்பம்.

இவருக்குச் சுப்பிரமணியதாஸ், காசிநாதன், முத்தையா தாஸ் என்ற மூன்று மகன்களும் பிச்சம்மாள், தங்கத்தாய் என்ற இரு மகள்களும் பிறந்தனர். போதிய வருமானமின்றிக் குடும்பத்தை நடத்தக் கடனுக்கு மேல் கடன் வாங்கினார். கடன்களைத் திருப்பித்தர முடியவில்லை கடன்காரர்கள் தொல்லை ஒருபுறம். மறுபுறம் அரசின் கெடுபிடிகள்.

பொருளாதார பலமின்றி மன உறுதியை மட்டுமே மூலதனமாக வைத்துப் போராடி வந்த இவருக்கு அரசாங்கம் மட்டும் தொல்லை தரவில்லை. நாடக உலகமும் தொல்லை தந்தது.

மிகுந்த ஈடுபாட்டுடன் தேச விடுதலையில் தன்னை ஒப்படைத்த இவருக்கு வீட்டில் துளியும் எதிர்ப்பில்லை. மாறாக எல்லோருமே இவரது விடுதலைப் பணிக்குத் துணை நின்றனர். இதன் காரணமாகக் குடும்பப் பராமரிப்பிற்கு வேண்டிய பொருளாதார பலமின்றிக் குடும்பம் சிரமப்பட நேர்ந்தது.

தாசின் தம்பி சண்முகதாஸ் அண்ணனை நிழல் போல் தொடர்ந்தார். இவரது நாடகங்களில் ஆர்மோனியம் வாசித்தவர் இவரே.

அடிக்கடி ஆங்கில ஆட்சியாளர்களால் சிறைத் தண்டனைக் குள்ளானார் தாஸ். இவர் தம்பி சண்முகதாஸ், மூத்த மகன் சுப்பிரமணியதாஸ், இவரது சகோதரி குருவம்மாளின் மகன் சின்னச்சாமி ஆகியோரும் தேசியப் போராட்டத்தில் ஈடுபட்டு நாடக மேடையேறிச் சிறை செல்லத் தொடங்கினர்.

# 15. இப்படியும் ஒரு குடும்பம்!

கேட்டிலும் துணிந்து நில் – பாரதியின் ஆத்திசூடி

இவ்வாறு ஒரு முறை விஸ்வநாததாஸ் சிறைத்தண்டனை அனுபவித்து வந்த அதே நேரத்தில், எந்த மேடை அவரைச் சிறைக்கு அனுப்பியதோ அதே மேடையில் மூத்த மகன் சுப்பிரமணியதாசும் தங்கை மகன் சின்னச்சாமியும் ஏறினார்கள்.

எந்தெந்தப் பாடல்கள் தாசைச்சிறைக்கு அனுப்பினவோ அந்தப்பாடல்கள் அனைத்தையும் பாடினார்கள். தம்பி சண்கதாஸ் இவர்களுக்குப் பக்க பலமாயிருந்து ஆர்மோனியம் வாசித்தார்.

சுப்பிரமணியதாசுக்கு ஆறு மாதச் சிறைத் தண்டனையும் இருநூறு ரூபா அபராதமும் விதிக்கப்பட்டது. அவர் மதுரைச் சிறைக்கு அனுப்பப்பட்டார். சின்னச்சாமியைத் திருச்சிச் சிறைக்கு அனுப்பினர்.

தந்தையோ வேலுர்ச்சிறையில் மகனோ மதுரைச் சிறையில். மருமகன் திருச்சிச் சிறையில் இப்படி இவர் குடும்பமே நாட்டு விடுதலைக்காகத் தங்களை முழுமனத்தோடு ஈடுபடுத்திக்கொண்டது.

அப்பா, அண்ணன், மாமா அனைவரும் சிறையிலே இருக்கும்போது அவனால்மட்டும் வெளியிலே சும்மாயிருக்க முடியுமா? ஆமாம்...எட்டு வயதே நிறைந்திருந்த தாசின் இரண்டாவது மகன் காசிநாதன் அந்நியத்துணி எரிப்பிலும் கள்ளுக் கடை மறியலிலும் கலந்துகொண்டான்.

★ ★ ★



## 16. இசையருவியில் எட்டயபுரம்

| |
|---|
| ஆண்மை தவறேல் – பாரதியின் ஆத்திசூடி. |

சிறை மீண்ட விஸ்வநாததாஸ் எட்டயபுரம் சமஸ்தான அரண்மனையரங்கில் மன்னர் காசிமகாராஜா முன்னிலை–யில் நாடகம் நடத்தினார். அன்றும் தேசியப் பாடல்களைப் பாடினார்.

மறுநாள் மன்னர் தாசுக்கு விருந்து கொடுத்தார். அந்த விருந்துபசார விழாவில் பரிசுகளும் அளித்தார். அந்த விருந்துபசார விழாவில் மன்னர் ''விஸ்வநாததாஸின் கொள் கைகளைப் பாராட்டுகிறேன். ஆனால் இவருடைய வாழ்க்கை என்னை வருத்தமுறச்செய்கிறது. வருமானத்தைக் குறைத்துக் கொண்டதோடு தனது சொத்துகளையும் கரைத்துவிட்டார்.

''இந்நிலை நீடித்தால் இவர் கடன்காரனாகக்கூடும். இவரது கவலையால் கலைத்தொழிலும் பாதிக்கும். இன்றி ருக்கும் நண்பர்கள் எவரும் வறுமைப்பட்ட பிறகு நெருங்க-மாட்டார்கள். எனவே இனிமேலாவது. குடும்பத்தின் நிலையை அனுசரித்து ஆங்கில எதிர்ப்புணர்ச்சியைக் கைவி டுமாறு கேட்டுக்கொள்கிறேன். இவர் விரும்பினால் நானும் உதவுவேன்'' என்று கூறினார். தாஸ் மழுப்பலோடு அவ்வி டம் விட்டு நகர்ந்தார்.

பசுமரத்தாணிபோல உள்ளத்தில் பதிந்து நின்ற கொள்கைகளை அவ்வளவு எளிதில் மறக்கமுடியுமா என்ன! தேசியத்தையும் விடுதலையையும் கண்ணெனப் போற்றியவர் கணப்பொழுதில் சுக வாழ்க்கைக்குச் சோரம் போய்விடுவாரா? உடலில் தெம்பு, உள்ளத்தில் வீரம், அறிவிலே தெளிவு இருக்கும்வரை இலட்சியங்களை ஈடேற்ற முடியும் என நம்பினார்.

# 17. பசும்பொன்னைச் சந்திக்கிறார்

| துன்பம் மறந்திடு — பாரதியின் ஆத்திசூடி |
| --- |

இராமநாதபுரத்தில் நாடகத்திற்குத் தடை விதித்தார்கள். நாடகத்தைக்காணச் சுற்றுப்புறச் சிற்றூர்களிலிருந்தெல்லாம் பல்லாயிரக்கணக்கான மக்கள் கூடிவிட்டனர்... ... நாடகம் இல்லையென்றால் மக்கள் ஏமாந்து போய் விடுவார்களே!

நாடகத்துக்குத் தானே தடை; விஸ்வநாத தாசுக்கு இல்லையே!

அத்தனை மக்களையும் அரண்மனைக்கு முன்புறமுள்ள திடலில் கூடச் செய்தார். அந்தப் பெரிய கூட்டத்தில் புரட்சிப் பாடல்களைப் பாடினார்.

மக்கள் மகிழ்ந்தனர். ஆனால் காவலர்கள் தாசைக் கைது செய்து சிறைக்கனுப்பினர்.

இதைக் கேள்விப்பட்டுப் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் பெருமகனார் அவர்கள் துடித்துப் போனார். ஜாமீனில் எடுக்க முயன்றார். தாசோ ஜாமீனில் வெளிவர மறுத்துத் தண்டனையை அனுபவித்து விட்டு வந்தார்.

பசும்பொன்னும் இசை மணியும் சந்தித்த காட்சிகள் வரலாற்றில் பொறிக்கத்தக்க விடுதலைப் போராட்ட உணர்வுகளின் குவியலாகும்.



# 18. ஒற்றைவாடையும், உணர்வு வாடையும்

வெடிப்புறப் பேசு – பாரதியின் ஆத்திசூடி.

சென்னை ஒற்றைவாடை அரங்கில் ஒரு சுவையான நிகழ்ச்சி நடந்தது. அன்று நாடகத்தில் விஸ்வநாததாஸ் கோவலனாக நடித்துக் கனல் தெறிக்கும் பாடல்களைப் பாடினார். மேடைக்கு வந்த காவல் அதிகாரிகள் அவரைக் கைது செய்வதற்கான ஆணையைத் தந்தனர்.

அதில் 'தேச விரோதப் பாடல்களைப் பாடினால் விஸ்வநாத தாசைக் கைது செய்யலாம்' என்றிருந்தது.

''இப்பொழுது இங்கே விஸ்வநாததாஸ் என்று யாருமில்லை. நான் கோவலன்; என்னிடம் வீண்வாதம் செய்து கொண்டிருந்தால் எனது வேலைக்காரர்களைக் கொண்டு விரட்டியடிக்கச் சொல்லுவேன்'' என்று சொன்னார்.

காவலர் திகைத்து நின்றனர். அவர் மேலும் பாடினார். முன்வரிசையில் உட்கார்ந்திருந்த ஒருவர், ''மகாத்மா காந்திக்கு ஜே! விஸ்வநாததாசுக்கு ஜே!'' என்று முழக்கமிட்டுக்கொண்டே மேடைக்கு வந்தார்.

தாம் அணிந்திருந்த ஆலைத் துணியிலான ஆடைகளைக் கழட்டி மேடையிலேயே தீயிட்டார். அவருக்குத் தாஸ் தன்னிடமிருந்த கதராடைகளை வழங்கினார். இது தான் சமயமென்று காவலர், தாசைக் கைது செய்தனர்.

மறு நாள் எழும்பூரிலுள்ள தலைமை மாநில நீதி மன்றத்தில் நிறுத்தினர். விஸ்வநாத தாசுக்காக வழக்கறிஞர் கொய்லோன் வாதாடினார்.

நீதிபதி, 'தாஸ் குற்றவாளி அல்ல' என்று கூறி விடுதலை செய்தார்.

அயல் நாட்டுத் துணி எரிப்புப் போராட்டத்தை நாடக மேடையிலே நடத்தி மக்கள் எழுச்சிக்குத் தாஸ் செய்த தொண்டு காற்றுள்ளளவும் கடலுள்ளளவும் அவர் பேரைச் சொல்லிக் கொண்டேயிருக்கும்.



## 19 மகன் தந்தைக் காற்றும் உதவி

ஏறுபோல் நட—பாரதியின் ஆத்திசூடி

தந்தை சிறையில் அடைக்கப்பட்டதால் தந்தை பாடி வந்த அதே பாடல்களை மூத்த மகன் சுப்பிரமணியதாஸ் தந்தையைப்போன்றே தனது கணீர் குரலில் மேடைகளில் பாடிவந்தார் என்பதை ஏற்கனவே அறிந்தோம். அதோடு-மட்டுமின்றி சுதந்திரப் போராட்டத்திலும் கலந்துகொண்டார்

1933 ல் திருநெல்வேலியில் நடந்த ஒரு போராட்-டத்தில் கைதுசெய்யப்பட்ட சுப்பிரமணியதாஸ் திருநெல்வேலி துணைப்பிரிவு நடுவர் நீதிமன்றத்தில் நிறுத்தப்பட்டார். நீதிமன்றத்தில் சுப்பிரமணியதாசை விசாரித்த நீதிபதி இனி விடுதலைப் போராட்டப் பாடல்களைப் பாடுவதில்லை என்-றும் இதுவரையில் பாடியதற்கு மன்னிப்பு கேட்பதாகவும் எழுதிக்கொடுத்தால் விடுதலை செய்வதாக நிபந்தனை விதித்தார்.

இதுதொடர்பாக மகன் சுப்பிரமணியதாஸ் கடலூர் சிறையிலிருந்த தந்தை விஸ்வநாத தாசுக்கு ஒரு நபர் மூலம் தகவல் அனுப்பினார். அப்போதுதான் அவருக்குத் திரும-ணமாகியிருந்தது. இளம் மனைவியைப் பிரிந்து வந்திருந்தார்.

''மன்னிப்புக் கடிதம் எழுதிக் கொடுப்பதைவிடச் சிறையிலேயே செத்து மடி'' என்று தந்தை பதிலனுப்பினார். மன்னிப்புக்கடிதம் எழுதிக்கொடுக்காத சுப்பிரமணிய தாசுக்கு ஓராண்டுச் சிறைத்தண்டனை கிடைத்தது.

''என் தந்தையிடமிருந்து அடக்கமும் ஆண்மையும் அடைந்தேன்'' என்ற மார்க்ஸ் அரேலியர் கருத்தும், ''நல்லொழுக்கத்திலும் மேலான ஒன்றையே தந்தை மகனுக்கு வழங்கமுடியும்'' என்ற நபிகள் நாயகத்தின் கூற்றும் இங்கு ஒளிரக் காணலாம்.



---

கோவில்பட்டியில் விஸ்வநாததாஸ் அவர்களின் ஒரு நாடகம் மாற்றுக் கட்சியினரின் மிரட்டலையும் அச்சுறுத்தலையும் மீறி நடந்தது.

மக்களின் விருப்பப்படியே தேசியப் பாடல்களைப் பாடினார். காவலர் வந்தனர். ''உங்களைக் கைது செய்கிறோம்'' என்று கூறினர். ''கைது செய்வதற்காக உத்திரவு வைத்திருக்கிறீர்களா?'' எனக் கேட்டார்.

''கைது செய்வதற்கு உத்தரவு தேவையில்லை காவல் நிலையத்திற்கு வாருங்கள்'' என அழைத்தனர்,

''ஆடு மாடுகளல்ல மக்கள். உங்கள் பின்னே நான் வர முடியாது. போய் வாருங்கள்'' எனக் கூறினார்.

இந்த வார்த்தைகளைக் கேட்டுக் காவலர் விக்கித்து நின்றபோது, பொது மக்கள் தாசுக்கு ஆதரவாகக் கிளர்ந்தெழுந்தனர். காவலர் மருண்டோடினர்.

---



1940-ல் 2500/- ரூபாய்க்கு ஏலம் போன
தியாகியின் திருமங்கல விடு

# 20. இதோ உதவி ... ... ... ...

| தன்மை இழவேல் – பாரதியின் ஆத்திசூடி |
|---|

சிறைத்தண்டனை முடிந்ததும் விஸ்வநாத தாசும் மகன் சுப்பிரமணிய தாசும் 'குடும்பத்தில் நிலவிய வறுமையை எப்படிப் போக்குவது?' என்று யோசித்துக் கொண்டிருந்த போதே வாங்கிய கடன்களுக்காக இவரது வீடு ஜப்தி செய்யப்பட்டு விட்டது. ஏலம் போவதைத் தடுத்து நிறுத்த முடியவில்லை தொலைந்து போன சொத்துகளனைத்தும் தொலைந்ததாகவே யிருக்கட்டும் குடியிருக்கும் வீட்டையாவது காப்பாற்றிக் கொள்ள வேண்டுமென்ற நிலையில் தனது கட்சிக்காரர்கள் சிலரை அணுகினார்; பலன் கிடைக்கவில்லை.

தாசின் நிலையறிந்து எட்டயபுரம் மகாராஜா பெரிதும் வருந்தினார். ஆனாலும் அவர் உதவ முன் வந்த போதும் அதனை ஏற்றுக்கொள்ள மறுத்து விட்டார்.

அந்த நேரம் சென்னை மாநகராட்சி, தென்னிந்திய நல உரிமைச் சங்கமான நீதிக் கட்சியின் கையிலிருந்தது. வாசுதேவநாயர் மேயராக இருந்தார். மேயர் வாசுதேவநாயர், விஸ்வநாத தாசிடம் ''உங்கள் நிலை எனக்குப் புரிகிறது. நீங்கள் காங்கிரசை விட்டு வெளியேறி விடுங்கள். நீங்கள் இழந்த சொத்துகள் அனைத்தையும் மீட்டுத் தருகிறோம். மாமா மாதம் ஒரு கணிசமான தொகையும் தந்து விடுகிறோம்'' என்றார். விஸ்வநாததாஸ் அதனையும் புறக்கணித்தார்.

கொண்ட கொள்கையில் உறுதியாய் நின்று வறுமை யிலும் செம்மை காத்த அவர் மாண்பினை என்னவென்பது?

# 21. தலைநகரே விழாக் கோலம்

**தோல்வியில் கலங்கேல் – பாரதியின் ஆத்திசூடி**

வாங்கிய கடன்களுக்காக இவரது வீடு ஜப்தி செய்யப்பட்டு ஏலத்திற்கு நாள் குறிக்கப்பட்டு விட்ட இச்சூழலில் சென்னையில் 1940 ஆம் ஆண்டு டிசம்பர் மாத இறுதியில் இராயல் அரங்கத்தில் விஸ்வநாததாசின் ஐந்து நாடகங்களுக்கு ஏற்பாடாகியிருந்தது. இதில் வரும் வருமானங்களைக் கொண்டு ஏலத்திற்குவரும் தனது வீட்டை மீட்டுவிடலாம் என்ற உறுதியான எண்ணம் தாசுக்கு ஏற்பட்டது.

சென்னைக்கு வந்த தாஸ் பழைய வண்ணாரப் பேட்டையில் தோமாஸ் என்பவரின் வீட்டில் தங்கியிருந்தார். தோமாஸ் என்பவர் பழைய வண்ணாரப் பேட்டையில் பிரபலமான கோணி வியாபாரியாவார். அங்கேதான் விஸ்வநாத தாசின் இரண்டாவது தங்கையான செந்தியம்மாள் அவரது கணவர் சாண்டோ நாகலிங்கம் பிள்ளையுடன் வாழ்ந்து வந்தார்.

இந் நிலையில் இரண்டாவது உலகப்போர் நிதிக்காக ஆங்கிலேயருக்குச் சாதகமாக நாடகங்களை நடத்தித்தந்தால் இவருக்கு ஏற்பட்டுள்ள கடன்களையெல்லாம் அடைத்துவிட்டு மாதந்தோறும் ஆயிரம் ரூபாய் உதவிப் பணம் அளிப்பதாக அப்போதைய சென்னை கவர்னராக இருந்த எர்ஸ்கின்துரை சென்னைக்கு வந்திருந்த விஸ்வநாததாசுக்குத் தகவல் அனுப்பினார்.

திரு. ராஜாராம் நாயுடு, திரு. நித்தியானந்த அடிகளார் போன்ற சில காங்கிரஸ் தலைவர்கள் கவர்னரின் வேண்டுகோளை ஆதரித்தனர். நாடகம் நடித்துக் கொடுக்கவும் இவரைக் கேட்டுக்கொண்டனர்.

ஆனாலும் இக் கோரிக்கைக்கு இவர் இணங்கவேயில்லை ''தமிழன் கஷ்டகாலத்திலும் கையேந்த மாட்டான். இவ்வாறு பணம் கொடுத்து என் தேசிய உணர்ச்சியை மழுங்கடித்துவிட முடியாது. ஆங்கிலப் பணம் எனக்கு அற்பமானது'' என மறுத்து விட்டார்.

உடல் நலமின்றிச் சென்னைக்கு வந்த விஸ்வநாத தாஸ் சென்னை இராயல் தியேட்டரில் முதல் மூன்று நாடகங் களில் நடிக்க முடியவில்லை.

1940-ஆம் ஆண்டு டிசம்பர் 31-ஆம் தேதி இரவு வள்ளி திருமணம் நாடகத்தில் விஸ்வநாததாஸ் வேலன்-வேடன் - விருத்தன் வேடங்களில் நடிப்பார் என்று விளம்பரப் படுத்தியிருந்தார்கள். நகரமே விழாக்கோலம் பூண்டிருந்தது. புரட்சிகரமான பாடல்களைக் கேட்கலாமென்று பொதுமக்கள் பெருமளவில் கூடினர். நாடக அரங்கம் நிரம்பி வழிந்தது. பாடிய உடனே கைதுசெய்து விடவேண்டுமென்று காவலரும் விழிப்புடன் தயாராயிருந்தனர்.

---

இன்றைய காமராசர் மாவட்டம் கன்னிசேரி என்ற ஊரில் கிராம காங்கிரஸ் கமிட்டியின் சார்பில் விஸ்வநாத தாசை வைத்துக்கூட்டம் ஒன்று நடப்பதாயிருந்தது. ஆனாலும் ''எங்கள் சரகத்தில் உங்கள் கூட்டமே நடக்கக்கூடாது'' என்று காவலர் தடுத்துவிட்டனர்.

ஊர் மக்கள் தாசிடம் சென்று முறையிட்டனர். அவர் களிடம் தகவல் சொல்லிவிட்டுப்பசும்பொன் தேவர் திருமகனை அழைத்துக்கொண்டு கன்னிசேரி சென்றார், தாஸ்.

ஊரே விழாக்கோலம் பூண்டிருந்தது மாவீரர்கள் இருவரும் வீர முழக்கம் செய்தனர். திரண்டிருந்த மக்கள் வெள்ளத்தைக் கண்டு காவல்துறை ஒதுங்கிப் பதுங்கிக்-கொண்டது.

---

## 22. பாடிப்பறந்த பாட்டுக்குயில்

| பார் மீது நான் சாகாதிருப்பேன் காண்பீர் – பாரதி |
| --- |

நாடகம் தொடங்கியது. எடுத்தவுடனே கழுகாசலக் காட்சி; அழகிய முருகனாக மயிலாசனத்தில் விஸ்வநாததாஸ் அமர்ந்திருக்கும் பொலிவுமிகு தோற்றத்தைக்காட்டித் திரைச் சீலை உயர்ந்தது.

மயில் மீதமர்ந்து முருகக்கடவுளாகத் தோற்றம் தந்த விஸ்வநாததாஸ் ''மாயா பிரபஞ்சத்திலே'' என்ற பல்லவி-யைத் தனது மணிக்குரலால் பாடத் தொடங்கினார்.

இவருடைய குரலைக் கேட்டவுடனேயே மக்கள் கைதட்டி மகிழ்ச்சி ஆரவாரம் செய்கின்றனர். காவலர்களோ என்ன பாடுகிறார் என்பதைக் கவனிக்கத் தங்கள் காதுகளைத் தீட்டிக்கொள்கின்றனர்.

மயில் வாகனத்தின் மீதமர்ந்து கையில் வேலுடன் பாடத்தொடங்கிய போதே இவரால் தொடர்ந்து பாட முடியாமல் மூச்சுத் திணறல் ஏற்பட்டது, தலை கொஞ்சம் கொஞ்சமாகச் சாய்வதைக் கண்டு மேடையில் ஆர்மோனியம் வாசித்துக் கொண்டிருந்த தம்பி சண்முகதாஸ் சட்டென்று எழுந்து வந்து இவரைத்தாங்கிப் பிடித்தார். பேச்சு மூச்சின்றி இருந்த விஸ்வநாத தாசை நாடக மேடையிலே படுக்க வைத்தனர். நாடகம் பார்க்க வந்த கூட்டத்தினர் கூக்குர லிட்டனர்.

நாடகம் பார்க்க வந்தவர்களில் ஒரு டாக்டர் மேடைக்கு விரைந்து சென்று தாசைப் பரிசோதித்தார். 'விஸ்வநாததாஸ் இறந்து விட்டார்' எனச் சோகத்தோடு கூறினார். அனைவருமே சோகத்தில் மூழ்கினர். தாசின் மரணச்செய்தி சென்னை நகரமெங்கும் பரவியது.

மிகச்சிறந்த கலைஞன் தான் செய்யும் அந்தத் தொழில் செய்யும் போதே தனக்கு மரணம் ஏற்படவேண்டும் என்று உளமாற விரும்புவானாம். அத்தகைய மரணம் இப்பெரு-மகனுக்கு நேர்ந்தது.

## 23. கண்ணீர் ...... கண்ணீர் ...... கண்ணீர் ...

> வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
> தெய்வத்துள் வைக்கப் படும். குறள்

நாடகத்திற்காகச் சென்னை வந்து சேர்ந்த பிறகு திருமங்கலத்திலிருக்கும் தனது குடும்பத்திற்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார் தாஸ். அதில், 'என்னைப்பற்றித் தவறாக ஏதாவது தந்தியோ செய்தியோ வந்தால் நம்பவேண்டாம்' என்று குறிப்பிட்டிருந்தார். அதனால், அவர் இறந்து விட்டார் என்ற செய்தியை வீட்டிலிருந்தோர் நம்பவில்லை.

நாடகம் முடிந்த மறு நாளே நாடக அரங்கத்தைப் பிரித்துவிட வேண்டுமென்று சென்னை மாநகராட்சி உத்தரவிட்டிருந்தது. தாசின் மரணச் செய்தி கேட்டு அதிர்ந்து போன நீதிக்கட்சி மேயரான வாசுதேவ் 'அந்திமச் சடங்குகள் முடியும் வரை அரங்கைப் பிரிக்க வேண்டாம்' என்று மறு உத்திரவு போட்டார்.

அந்த அரங்கத்தின் உரிமையாளரான கன்னையா உடையார் 'இனிமேல் இந்த அரங்கில் எந்தக் கலை நிகழ்ச்சியும் நடக்காது; தியாகி விஸ்வநாததாசின் நிகழ்ச்சியே கடைசியாக இருக்கட்டும்' என்று அறிவித்தார்.

1941 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் முதல் தேதியன்று பிற்பகல் 3 மணியளவில் எந்த மயில் மீது முருகன் வேடத்தில் அமர்ந்து உயிர் நீத்தாரோ அதே மயில் வாகனத்தில் தனது இறுதிப் பயணத்தைத் தொடங்கினார், தாஸ்.

இசையரசி கே. பி. சுந்தராம்பாள், விஸ்வநாததாசின் திருவுடல் மீது ரத்தினக் கம்பளம் போர்த்தினார். கலைஞர்களும் பல்வேறு அரசியல் பிரமுகர்களும் மக்களும் அத் தியாக சீலனுக்கு மலர்மாலை சூட்டி வணங்கினர்.

பெருந்தலைவர் காமராசரின் அரசியல் குரு தீரர் சத்தியமூர்த்தி, கே. பி. சுந்தராம்பாள், அனந்த நாராயண அய்யர் போன்ற மேதைகள் இவரது இறுதியாத்திரையில் கலந்து சிறப்பித்தனர். இவரது அந்த இறுதியாத்திரையின் போது சென்னை நகரப் போக்குவரத்து 7 மணி நேரம் ஸ்தம்பித்துப் போனதாகப் பாரதி கலைஞர் எஸ். வி. சகஸ்ர-நாமம் தெரிவிக்கிறார்.

முருகப் பெருமானின் உற்சவ உலாபோல் இராயல் அரங்கிலிருந்து புறப்பட்ட அந்த இறுதி ஊர்வலம் யானை கவுனி, சைனா பஜார், சௌகார்பேட்டை தங்கசாலை, வழியாக இரவு 7 மணிக்கு மூலக் கொத்தளம் மயானத்தை அடைந்தது. தாசின் மூத்த மகன் சுப்பிரமணிய தாஸ் சிதைக்குத் தீ மூட்டினார்.

ஈமச்சடங்குகள் அனைத்தும் சென்னையிலேயே நடை பெற்றன. மூத்தமகன் சுப்பிரமணிய தாசும் அவரது தம்பி சண்முகதாசும் அங்கிருந்து இறுதிச் சடங்குகளை நடத்தி வைத்தார்கள். திருமங்கலத்திலிருந்து குடும்பத்தினர் எவரும் சென்னை போகவில்லை.

அண்ணல் காந்தியடிகளின் வேண்டுகோளை ஏற்று நாட்டு விடுதலைப் போரில் பங்கேற்க உறுதி பூண்டு தனது முப்பதாண்டு கால நாடக வாழ்வில் வெள்ளை ஏகாதிபத்தி யத்தை எதிர்த்து மேடைகளில் புரட்சிப் பாடல்கள் பாடி மக்களை எழுச்சியூட்டிய அந்த மாபெரும் கலைஞன் மறைந்து விட்டார்.

எந்த விடுதலைக்காகத் தான் வாழ்ந்த காலமெல்லாம் குரல் கொடுத்தாரோ அந்த விடுதலை இவர் உயிர்விட்ட ஏழு ஆண்டுகளுக்குப் பிறகு கிடைத்தது. இவர் இலட்சியம் ஈடேறிய திருப்தியில் இவர் ஆன்மா சாந்தியடைந்திருக்கும்.

வறுமைச் சூறைக்காற்றில் அந்தச் சுடர் விளக்கு அணைந்தது. இவரது மரணம் தமிழுள்ளங்களைக் கதற வைத்தது; தேசிய உள்ளங்களைத் தீயாய்ச் சுட்டது.

# 24. உத்வேக மூட்டிய உணர்ச்சிப் பாடல்கள்

| |
|---|
| வேதம் புதிது செய் – பாரதியின் ஆத்திசூடி |

நாடக மேடைகளில் ஆங்கில அரசை எதிர்த்து எண்ணற்ற பாடல்கள் பாடியுள்ளார் விஸ்வநாத தாஸ். ஆனாலும் அவர் பாடிய பாடல்களுள் மிகப் பிரபலமானது.

''கொக்குப் பறக்குதடி பாப்பா - நீயும்
கோபமின்றிக் கூப்பிடடி பாப்பா''

என்ற பாடல்தான்! முதன் முதலில் இங்கு வணிகம் செய்ய வந்த ஆங்கிலேயர் ஆட்சியுரிமை பெற்று நமது நாட்டுச் செல்வங்களையெல்லாம் கொண்டு சென்றனர். ஆங்கிலேயர்களைக் கொக்காக உருவகம் செய்து அவர்கள் செய்யும் கொடுமைகளைப் பாமரரும் அறியுமாறு பாடினார்.

நூற்றுக்கணக்கான கூட்டங்களில் கூறமுடியாத கருத்துகளை நாடகங்களில் பாடல்கள்மூலம் எளிதாக உணர்த்தினார் அந்தப்பாடல்களைக்கேட்டு மக்கள் மிகவும் ஆரவாரம் செய்திருக்கிறார்கள். ஒன்ஸ்மோர் என்று குரலெழுப்பி மீண்டும் மீண்டும் பாடுமாறு கேட்டுப் பிடிவாதம் செய்திருக்கிறார்கள். நிறையப்பேர் விடுதலைப் போராட்டத்தில் ஈடுபடவும் இது போன்ற பாடல்கள் பயன்பட்டன என்பது மறுக்க முடியாத உண்மை.

''தேசாபி மானிகளே உண்மைத் தெய்வீக ஞானிகளே'' என்ற பாடலில் நமது தேசியத் தலைவர்களைப் போற்றினார் பழைய நடைமுறைகளை மாற்றி ஆங்கிலம் கற்று ஆங்கில நடைமுறைகளைப் பின்பற்றும் கொடுமைகளைச் சாடுகிறார். நம்முடன் சேர்ந்து வாழும் உடன்பிறப்புகளை ஒதுக்கிவைக்கும் போக்கினைக் கண்டிக்கிறார்.

''கதர்க்கப்பல் கொடி தோணுதே'' என்ற பாடலில் காந்தியடிகள் மீது அவர் வைத்த மதிப்பு, மரியாதை நமக்குத் தெரிகிறது. அண்ணலின் கொள்கை வழி நடக்கவும், கதர் இயக்கத்தை ஏற்றுப் பின்பற்றவும் கேட்டுக்கொண்டார்.

தீண்டாமைக் கொடுமையைப் பற்றி நெஞ்சுருகப்பாடும் பாடல்தான் ''தாழ்த்தப்பட்ட சோதரரைத் தாங்குவாருண்டோ'' என்ற பாடல். அன்றாடம் உழைத்துப் பிழைக்கும் சாதாரணக் கூலிகள். பண்ணையார்களால் எவ்வாறெல்லாம் கொடுமைப் படுத்தப்படுகிறார்கள் என்பதை அறுபது ஆண்டுகளுக்கு முன்பே பாடி அவர்கள் கண்ணீரைத் துடைக்கப் பாடுபட்டார். அம் மக்களின் நலனைக் காக்கப் போராடி நன்மைகளைத் தேடுங்கள் என்று வேண்டினார்.

ஆங்கில அரசாங்கம் 'ஜாலியன் வாலாபாக்கில்' நடத்திய காட்டு மிராண்டித்தனமான படுகொலையைக் கண்டித்து இவர் பாடிய ''பஞ்சாப் படுகொலை பாரில் கொடிது டயர் மடமதியது'' என்ற பாடல் மிகப் புகழ் வாய்ந்தது. ஆங்கில ஆட்சியின் அடக்கு முறை, ஆணவத்தை எதிர்த்து மக்களைக் கிளர்ந்தெழச் செய்த பாடல் இது. கேட்கும் மக்களைக் கரைந்துருகச் செய்து தேச விடுதலையில் வீறு கொண்டு போராடச் செய்ததும் இப் பாடலாகும்.

இதனை உறுதி செய்யும் வகையில் புகழ்பெற்ற திரைப்பட நடிகர், கலைமாமணி திரு. கே. சாரங்கபாணி கூறுவதைக் கேட்போம். ''பஞ்சாப் படுகொலை பாரில் கொடிது'' என்ற பாடலை எஸ். எஸ். விஸ்வநாததாஸ் அவர்கள் பாடும் பொழுது மக்கள் கூட்டம் கட்டுக் கடங்காத உணர்ச்சிப் பெருக்கில் ஒவ்வொரு நாளும் இருந்ததைப் பல நாடகங்களில் அடியேன் கண்டு களித்ததுண்டு'' எனக் கூறுகிறார்.

மேலும் அவர் ''1928-ஆம் ஆண்டு சென்னை எஸ்பிளனேட் என்னுமிடத்தில் (உயர் நீதி மன்றம் எதிரில்) இரண்டாயிரம், மூவாயிரம் ரசிகர்கள் அமர்ந்து நாடகம் பார்க்கும் வசதியுள்ள ஒரு பெரிய தியேட்டர் இருந்தது. கவிஞர் பாஸ்கரதாஸ் அவர்கள் இயற்றிய இந்தப் பஞ்சாப் படுகொலை பாடலைக் கேட்கச் சகிக்காத ஆங்கில அரசு அந்தத் தியேட்டரின் உரிமத்தை ரத்து செய்து தியேட்டர் இருந்த இடம் தெரியாமல் செய்தது என்பது இன்றுள்ள தலைமுறைக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை'' என்கிறார்.

1921 தொடங்கி 1932 வரை இந்தியாவெங்கும் விடுதலை இயக்கம் சண்ட மாருதமென வீசியது. இக்கால கட்டத்தில் தேசியக் கவிஞர் மதுரபாஸ்கரதாஸ், அண்ணல் காந்தியடிகள் பற்றியும், விடுதலை பற்றியும் எழுச்சியும், உணர்ச்சியும் ஊட்ட வல்ல நிறைய பாடல்கள் எழுதினார். மிகச் சிறந்த சங்கீத மேதைகளான மன்னார்குடி எம் ஜி. நடராச பிள்ளை, கே. எஸ். அனந்தநாராயண அய்யர், ஓரடி முத்துவேல் பிள்ளை, திருமதி எம். ஆர். கமலவேணி, ஆர்மோனியக்கலைஞர் வாசுதேவநாயர், எம்.எம்.சிதம்பரநாதன் கே. பி. சுந்தராம்பாள், எம். எஸ். சுப்புலட்சுமி, போன்ற சங்கீத மேதைகள் அப்பாடல்களைப் பாடி சுதந்திர ஆர்வத்தை வளர்த்தனர்.

நாடக மேதை விஸ்வநாததாஸ் அவர்களும் இவர் இயற்றிய பாடல்களைத் தனக்கேயுரிய கணீர்க்குரலில் பாடி மக்களின் மனத்தில் நீங்கா இடம் பெற்றார். விடுதலை இயக்கத்தில் இவ்வாறு மதுர பாஸ்கரதாஸ் அவர்களும் விஸ்வநாத தாசும் வில்லும் அம்புமாகச் செயல்பட்டனர்.

மேலும் தெ.பொ. கிருஷ்ணசாமிப் பாவலரின் சீடர் ஆர்.பி.எஸ். மணி, 'தேச பக்திப் பாடல்கள்' என்ற தலைப்பில் ஒரு பாடல் தொகுப்பை வெளியிட்டார். அத் தொகுப்பிலுள்ள பெரும்பாலான பாடல்களைப் பாடிப் பிரபலமாக்கினார் தாஸ்.

''அப்படியானால் சேவலைச் சன்மானமாகக் கொடுக்க முடியுமா?'' எனக் கேட்டார் ஜமீன்தார்.

சேவலைப் பெறுவதில் ஜமீன்தார் விடாக்கண்டராக இருப்பதையறிந்து தாஸ் ஜமீன்தாருக்கு அந்தச் சேவலைச் சன்மானமாகக் கொடுக்க ஒப்புக் கொண்டார்.

''நான் வாங்கிய இந்தச் சேவலுக்குப் பதிலாக, நான் என்னுடைய ஷெவர்லட்காரை உனக்குப் பரிசாகத் தருகிறேன் கொண்டு போ'' என்றார் ஜமீன்தார்.

இதைச் சற்றும் எதிர்பார்க்காத தாஸ் ஆச்சரியத்தில் உறைந்து விட்டார். ''ஐயா... என்னுடைய இத்தச் சேவலுக் காக விலையுயர்ந்த உங்கள் காரைத் தருவதா? வேண்டவே வேண்டாம்'' என மறுத்தார்.

தேச விடுதலைக்காக நாடகங்கள் மூலம் குரல் கொடுத்து வரும் விஸ்வநாததாசின் கலைத் தொண்டினை அறிந்த ஜமீன்தார் விடவில்லை. ''தமிழ் நாட்டின் பல பாகங்களுக்கும் சென்று நாடகங்கள் நடத்தி வர என் கார் பயன்படும்'' என்று கூறிக் காரை எடுத்துச் செல்லும்படி கேட்டுக் கொண்டார்.

தாஸ் எவ்வளவோ மறுத்தும் ஜமீன்தார், தாசிடம் காரை ஒப்படைத்தார். தாஸ், தன்னுடைய நாடகப் பணிக்கும் சொந்த உபயோகத்துக்குமாகச் சில ஆண்டுகள் வரை அந்தக் காரைப் பயன்படுத்தினார்.

கல்யாணமாகி மாப்பிள்ளை வீட்டுக்கு மறு வீடு சென்ற தன் மூத்த மகள் பிச்சம்மாளுக்கு இந்தக் காரில் தான் சீதனங்கள் கொடுத்தனுப்பினார் தாஸ்.



'காந்தியோ பரம சன்னியாசி' 'வாராண்டா வாராண்டா தொப்பிக்காரன்', ஆடுராட்டே சுழன்றாடு ராட்டே' போன்ற பாடல்களையும் பாடி மக்கள் மனத்தில் இடம் பெற்றவர் தேசிய நடிகர், தியாகி விஸ்வநாததாஸ்.

இவரது பாடல்களின் இனிமையைக் கேட்டுணர்ந்த பாவேந்தர் பாரதிதாசன் அவர்கள்

''வைக்கோலைத் தின்னுகிற மாடும் அன்னோன்
வாய்ப்பாட்டில் சொக்கிவிடும் நடிப்பில் வல்லோன்
தெற்கிலும்ஓர் நடிகமணி இருந்தான் என்று
செப்பிற்று வடநாடும் அந்த நாளில்'' என்று

புகழ்ந்துரைக்கிறார்.

நாடக மேடைகளில் உணர்ச்சியோடும் உருக்கத் தோடும் பாடிய இவரது பாடல்களைக் கேட்டுக் கண்ணீர் விட்டுக்கதறி அழுதவர் பலர். கம்பீரமாக நெஞ்சு நிமிர்த்திப் பாடிய இவரது பாடல்களைக் கேட்டு ஆவேசம் கொண்டு, விடுதலைப் போராட்டத்தில் பங்கு கொண்டோர் மிகப் பலர். கோடையிடியென இவர் முழக்கிய பாடல்களைக் கேட்டு மெய் சிலிர்த்தவர் ஏராளம்; ஏராளம்.

இவ்வாறாக எத்தனையோ பாடல்கள் பாடி மக்களை எழுச்சிகொள்ளச் செய்துள்ளார் என நாம் பெருமைப்பட்டுக் கொண்டாலும் இவரது மிகச் சில பாடல்களே இன்று நாம் கேட்குமளவில் உள்ளன என்பதை அறியும் போது வேதனை நம் நெஞ்சைப் பிழிகிறது.

இவர் பாடிய ஏனைய பாடல்களையும் வெளியிட்டு அவற்றை மக்கள் கேட்குமாறு செய்ய அரசு முயற்சிகள் மேற்கொள்ள வேண்டுமென்பதே நமது பேரவா.

# 25. தொழிலாளர்களின் தோழர்

சுமையினுக்கு இளைத்திடேல் - பாரதியின் ஆத்திசூடி

1937-ஆம் ஆண்டு மதுரை ஆர்.வி. மில் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்தனர். வெள்ளை நிர்வாகம் கருங்காலிகளைக் கொண்டு வேலை நிறுத்தத்தை முறியடிக்க முடிவு செய்தது. அப்போது மதுரை ஜில்லா போர்டு உறுப்பினராக இருந்த தாஸ் இதனையறிந்து கொதிப்படைந்தார். தொழிலாளர்களின் கோரிக்கைகள் நிறைவேறாமல் மில்லைத் திறக்கவிடக் கூடாதென்ற முடிவோடு மதுரை வைத்திய நாதய்யர், மட்டப்பாறை வெங்கட்ராமய்யர், பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர் ஆகியோரையும் அழைத்துக் கொண்டு சென்னை போனார்.

அப்பொழுது இராசகோபாலாச்சாரியார் முதலமைச்சராக இருந்தார். அவரிடம் நிலைமையை விளக்கி மில்லைத் திறப்பதற்குத் தடைவிதிக்கும்படி கோரினார். இவரது வேண்டுகோளின்படி மில்லைத் திறப்பதற்குத் தடை விதிக்கப்பட்டது. தொழிலாளர் போராட்டம் வென்றது. நிர்வாகம் பணிந்தது ஆர் வி. பட்டி என்ற பெயரில் தொழிலாளர்களுக்கு வீட்டு வசதி செய்து கொடுக்க நிர்வாகம் ஒப்புக்கொண்டது. இந்த அரிய பணியில் துணை நின்ற பெருமை நாடக நடிகர் தாசுக்கு உண்டு.

இவர் ஒரு சிறந்த நாடக நடிகர் மட்டுமல்ல, மிகச் சிறந்த மனிதாபிமானியும் கூட. தன் குடும்பம் போகவும் ஏழு குடும்பங்களை இவர் வைத்துக் காப்பாற்றினார்.

கணவனை யிழந்த வேறு ஜாதிப்பெண் ஒருத்தி தன் குழந்தையோடு வந்து, ''வேறு ஆதரவு எதுவும் எனக்கில்லை இனி உங்களை நம்பித்தான் நானும் என் குழந்தையும்

பிழைக்க வேண்டும்'' என்று கெஞ்சிக் கண்ணீர் வடித்த போது அந்தத் தாயையும் பிள்ளையையும் காக்கத் துணிந்தார் தவிரவும் தன் குடும்பம், தன் மகன் குடும்பம், தங்கை குடும்பம் மற்றும் சில குடும்பங்களும் இவரையே நம்பியிருந்தன. இவரது நாடக வருமானம் குறைந்த போது இழப்பு இவரது குடும்பத்திற்கு மட்டுமல்ல, இவரைச் சார்ந்த குடும்பங்களுக்கும் தான்.



## 26. சேவல் கொண்டு வந்த 'ஷெவர்லட் கார்'

**போர்த் தொழில் பழகு – பாரதியின் ஆத்திசூடி**

சோர்ந்த உள்ளங்களுக்குப் புத்துணர்வூட்டும் இசையில் சிறந்து விளங்கிய இசைமேதை விஸ்வநாததாஸ் பிற கலைகளிலும் ஈடுபாடு உள்ளவராக விளங்கினார். அப்படிப்பட்ட ஓர் ஈடுபாடு சேவற்கட்டில் இவருக்கிருந்தது.

சேவலின் காலில் கத்திகட்டி இரண்டு சேவல்களைச் சண்டைக்கு விடுவர். அவை ஒன்றையொன்றை அடித்துக் கடைசியில் ஏதாவது ஒரு சேவல் தோற்கும். இவ்வாறு சண்டையிடும் சேவல்களுக்கு நல்லஇரை (உணவு)கொடுத்துக் கவனமாக வளர்த்து வருவர். இந்தச் சேவல் சண்டைகள் முன்பு பிரபலமாக இருந்தன. இந்தச் சண்டைகளைப் பார்க்க மக்கள் கூட்டங் கூட்டமாக வருவர். பொழுது போக்கு வசதிகள் இல்லாத காலத்தில் மக்களுக்கு இது ஒரு நல்ல பொழுது போக்காக இருந்தது. இப்பொழுதெல்லாம் இம்மாதிரியான சேவல் சண்டைகள் அருகிவிட்ட போதிலும் சில இடங்களில் சேவற்கட்டுகள் நடந்துகொண்டுதான் இருக்கின்றன.

இப்படிப்பட்ட சேவற் சண்டைகளுக்கு நல்லினச் சேவல்கள் வளர்ப்பதிலும் அவற்றைச் சண்டைக்கு விட்டு மகிழ்வதிலும் அளவு கடந்த விருப்பம் இவருக்கு.

ஒரு சமயம் பழைய இராமநாதபுரம் நெல்லை மாவட்ட எல்லையான தேவியாறுக்குச் சமீபமுள்ள ஒரு தோப்பில் சேவற் கட்டு நடந்தது. இந்த இடம் சேத்தூருக்கு அருகிலுள்ள தேவதானத்திற்குத் தென்புறமுள்ளது.

அதில் சேத்தூர் ஜமீன்தார் சேவக பாண்டியன் சேவலும், விஸ்வநாததாஸ் சேவலும் சண்டைக்குவிடப்பட்டன அன்று தாசின் சார்பில் அவருடைய அப்பாதான் சேவலைக் கொண்டு சென்றிருந்தார். சிறிது நேரம் கழித்ததும் தாசின் சேவல் ஜமீன்தாரின் சேவலை வென்று விட்டது. ஜமீன்தாரின் சேவல் தோற்று ஓடி விட்டது.

வெற்றி பெற்ற அந்தச் சேவலை விலைக்குத் தருமாறு தாசின் அப்பாவிடம் ஜமீன்தார் கேட்டார். அதற்குத் தாசின் அப்பா ''ஜமீன்தார் அய்யா, ஏம்மகன் ரொம்ப ஆசையோடு வளர்க்கும் ஜாதிச் சாவல் இது. இதப்பத்தி அவங்கிட்ட தான் கேக்கனும்'' என்று கூறினார். உடனே ஜமீன்தார், ''அப்படியா... சரி... உன் மகனை என்னை வந்து பார்க்கச் சொல்'' என்று கூறிவிட்டுச் சேத்தூர் சென்று விட்டார்.

தாசின் அப்பா நடந்ததையெல்லாம் திருமங்கலம் சென்று மகனிடம் விவரித்தார். சேத்தூர் சென்று உடனடியாக ஜமீன்தாரைப் பார்க்கும் படி கூறினார். தாசும் சேத்தூர் புறப்பட்டுச் சென்று ஜமீன்தாரை வணங்கினார். இவருடைய அப்பாவிடம் கேட்ட அதே கேள்வியைத் தாசிடமும் கேட்டார்.

''ஐயா... அதை நான் மிகப்பிரியமாக என் பிள்ளை போல வளர்த்து வருகிறேன் அதை விலைக்கு என்னால் கொடுக்க முடியாதே'' என்று தயங்கித் தயங்கிக் கூறினார். ஆனாலும் சேவற் கட்டில் விருப்பமுடைய ஜமீன்தார் விட வில்லை.

''அப்படியானால் சேவலைச் சன்மானமாகக் கொடுக்க முடியுமா?'' எனக் கேட்டார் ஜமீன்தார்.

சேவலைப் பெறுவதில் ஜமீன்தார் விடாக்கண்டராக இருப்பதையறிந்து தாஸ் ஜமீன்தாருக்கு அந்தச் சேவலைச் சன்மானமாகக் கொடுக்க ஒப்புக் கொண்டார்.

''நான் வாங்கிய இந்தச் சேவலுக்குப் பதிலாக, நான் என்னுடைய ஷெவர்லட்காரை உனக்குப் பரிசாகத் தருகிறேன் கொண்டு போ'' என்றார் ஜமீன்தார்.

இதைச் சற்றும் எதிர்பார்க்காத தாஸ் ஆச்சரியத்தில் உறைந்துவிட்டார். ''ஐயா... என்னுடைய இத்தச் சேவலுக்காக விலையுயர்ந்த உங்கள் காரைத் தருவதா? வேண்டவே வேண்டாம்'' என மறுத்தார்.

தேச விடுதலைக்காக நாடகங்கள் மூலம் குரல் கொடுத்து வரும் விஸ்வநாததாசின் கலைத் தொண்டினை அறிந்த ஜமீன்தார் விடவில்லை. ''தமிழ் நாட்டின் பல பாகங்களுக்கும் சென்று நாடகங்கள் நடத்தி வர என் கார் பயன்படும்'' என்று கூறிக் காரை எடுத்துச் செல்லும்படி கேட்டுக் கொண்டார்.

தாஸ் எவ்வளவோ மறுத்தும் ஜமீன்தார், தாசிடம் காரை ஒப்படைத்தார். தாஸ், தன்னுடைய நாடகப் பணிக்கும் சொந்த உபயோகத்துக்குமாகச் சில ஆண்டுகள் வரை அந்தக் காரைப் பயன்படுத்தினார்.

கல்யாணமாகி மாப்பிள்ளை வீட்டுக்கு மறு வீடு சென்ற தன் மூத்த மகள் பிச்சம்மாளுக்கு இந்தக் காரில் தான் சீதனங்கள் கொடுத்தனுப்பினார் தாஸ்.



## 27. இசைத் தேவதையின் இளைய மகன்

| பெரிதினும் பெரிது கேள் – பாரதியின் ஆத்திசூடி |
| --- |

சேவக பாண்டியன் சேத்தூர் ஜமீன்தார். மிகச் சிறந்த கலா ரசிகர். கலைகளையும் கலைஞர்களையும் ஆதரித்த வள்ளல். எல்லாக் கலைகளிலும் ஈடுபாடுடைய ஜமீன்தாருக்கு இசையில் ஒருதனி ஈடுபாடு, இசைக் கலைஞர்களை வரவழைத்து அவர்கள் பாட இவர் கேட்டுச் சுவைத்துக் கொண்டிருப்பார்.

இவர் கஞ்சிரா போடுவதில் வல்லவர். இவர் கஞ்சிரா· வுக்கு ஏற்றாற் போல யாராலும் பாட முடியாது. தன் கஞ்சிராவுக்குப் பாடச் சொல்லிப் பலரையும் கேட்டுப் பார்த்தார் ஆனாலும் இவரது கஞ்சிராவுக்கு யாரும் பாடத் தயாராயில்லை

சிலர் ''நாடக நடிகர் விஸ்வநாததாஸ் உங்கள் கஞ்சிராவுக்கு ஏற்பப் பாடலாம்'' என்று கூறினர். அதைக் கேட்ட ஜமீன்தார் திருமங்கலத்துக்குத் தாசைத் தேடிவந்தார்·

இருவருமாகப் பொதுவாகப் பேசிக் கொண்டிருந்த பொழுது தன் கஞ்சிராவுக்குப்பாட வேண்டுமென்று ஜமீன்தார் தாசைக் கேட்டுக் கொண்டார். அதற்குத் தாஸ் இசைய வில்லை. ஜமீன்தாரோ விடுவதாக இல்லை. மிகவும் வற்புறுத்திய பிறகு ஜமீன்தாரின் கஞ்சிராவுக்குப் பாட இசைந்தார்.

ஜமீன்தார் கஞ்சிரா போடத் தொடங்கியதும் தாஸ் மெல்லப்பாடத் தொடங்கினார். பத்துப்பதினைந்து மணித் துளிகள் மட்டுமே ஜமீன்தாரால் கஞ்சிரா போட முடிந்தது. தாசின் இசை வெள்ளத்தில் ஜமீன்தார் இழுத்துச் செல்லப் பட்டார். அவர் விரல்கள் அப்படியே நின்றன.

ஜமீன்தார் தோல்வியை ஒப்புக்கொண்டு தாசின் இசைப் புலமையைப் பாராட்டிச் சென்றார் எனத் தெரிகிறது. எல்லோரையும் கஞ்சிராவால் மிரட்டிய ஜமீன்தார், விஸ்வநாத தாசின் இசைப் பாய்ச்சலில் ஆழ்ந்தே போனார். விஸ்வநாத தாசின் இசைத்தேனில் மொய்த்த வண்டான பாண்டியனார் தேனில் தோய்ந்து சிறகடிக்க முடியாமல் போனார் என்பது செவிவழி நமக்குக் கிடைக்கும் செய்தி.



## 28. சொற்போர் மட்டுந்தானா! மற்போருந்தான்

லாவகம் பயிற்சி செய் – பாரதியின் ஆத்திசூடி

விஸ்வநாததாஸ் பேரும் புகழும் பெற்று நல்ல நிலையில் இருக்கும் போது மற்போரில் சிறந்து விளங்கிய பஜ்லுதின் பயில்வான் என்பவர் தமிழ் நாட்டுக்கு வந்தார். திரு-மங்கலத்துக்கு வந்த அவரைத் தாஸ் சில மாதங்கள் தனது சொந்தப் பராமரிப்பில் வைத்துக் கொண்டு தன் ஊரில் உள்ள பிறருக்கு மற்போர்ப் பயிற்சி அளிக்கச் செய்தார்.

தான் ஊரில் இருக்கும் நாட்களில் மற்போர் வீரர்கள் ஒருவருக் கொருவர் மற்போர் செய்வதைப் பார்த்து ரசிப் பாராம். பஜ்லுதின் பயில்வானோடு திருமங்கலத்தைச் சேர்ந்த பரமன் பயில்வான், வேங்கன் செட்டியார் பயில்வான் போன்றோர் மற்போர் செய்வதைக் கைகொட்டி ரசித்துப் பாராட்டுவாராம். இந்த மற்போர் திருமங்கலம் பேயாண்டி கோவில் வளாகத்தில் வைத்து நடைபெறும். மற்போர்ப் பயிற்சி பெற விரும்பியவர்கள் இங்குப் பயிற்சி பெற்ற-தாகவும் தெரிகிறது.

இது தவிரவும் இவ் வளாகத்தில் கிடாய்ச் சண்டை, கௌதாரிச் சண்டை, சேவல் சண்டை போன்ற விளையாட்டு களும் நடைபெற்றன. அவற்றையும் பார்த்து ரசிப்பது தாசின் வாடிக்கையான செயல்கள்.

இப்பொழுது அதே பேயாண்டிசுவாமி கோவில் வளாகத்தில் P. சந்தானம் அவர்களை ஆசிரியராகக் கொண்டு அனுமான் உடற்பயிற்சிக் கழகம் நடத்தப்பட்டு வருகிறது. சுமார் 120 பேர் வரை தினமும் காலையிலும் மாலையிலும் இங்கு உடற்பயிற்சி பெறுகிறார்கள்.

திருமங்கலம் ராஜாஜி தெருவில் அமைந்துள்ள இந்த உடற்பயிற்சிப் பள்ளியில் சிலம்பம், மற்போர் கராத்தே, ஜூடோ, பளு தூக்குதல், களரி, குஸ்தி போன்ற விளையாட்டு களுக்குப் பயிற்சிகள் அளிக்கப்படுகின்றன. கடந்த 38 ஆண்டு களாகச் சீரிய முறையில் நடந்து வரும் இந்த உடற்பயிற்சிப் பள்ளியில் பஜ்லுதின் பயில்வான் உபயோகித்த கர்லாக் கட்டை இன்றும் உள்ளது.

நாடகக் கலைஞர் ஒருவரால் தொடங்கி வைக்கப்பட்ட மற்போர் இன்று பல்வேறு வீர விளையாட்டுகளாக மலர்ந்து வருவதை இவ் வளாகத்தில் கண்டு மகிழ்கிறோம்.



''நாம் நெடுநாட்கள் உயிர்வாழ வேண்டும் என்பது அப்படியொன்றும் முக்கியமானது அல்ல; நமது மரணத்துக்குப் பிறகும் இந்த உலகத்தில் நமது பெயர், புகழ் இறவாமல் உலாவிக்கொண்டி ருக்க வேண்டும்.''

# 29. நலம் பயக்கும் நாடகத் தொண்டு

> ''பாட்டும் பரதமும் பண்புள்ள நாடகமும்
> நாட்டுக்கு நல்ல பயன்'' – கவியோகி சுத்தானந்த பாரதி

இயல், இசை, நாடகம் இம்மூன்றனுள் சிறந்து விளங்குவது நாடகக் கலையே. இயலும் இசையும் நாடக வாயிலாகவும் வெளிப்படுகிறது. கண்ணுக்கும் காதுக்கும் விருந்தூட்டி மனத்துக்கு மகிழ்ச்சியைத்தரும் கலையும் இது-வாகும். பார்ப்போருக்கு உணர்ச்சியும் ஊக்கமும் ஊட்டிப் போராட.த்தூண்டும். பாமரர்க்கும் இன்பம் பயக்க வல்ல ஒரே கலை இந்நாடகக்கலையே என்பதில் யாருக்கும் ஐயமில்லை.

இத்தகைய சிறப்பு வாய்ந்த நாடகங்கள் சென்ற நூற்றாண்டின் பிற்பகுதியிலும் இந் நூற்றாண்டின் முற்பகுதி யிலும் தமிழகத்தின் மூலை முடுக்கெங்கும் பல்வேறு நாடகக் கலைஞர்களால் நடத்தப் பெற்றன. பெரும்பாலும் இவை புராண நாடகங்களாகவே யிருந்தன. விடுதலைப் போராட்ட காலத்தில் நடந்த இந்தப் புராண நாடகங்களிடையே தேச பக்தியை வளர்க்கும் பாடல்கள் பல பாடப்பெற்றன.

பெரிதும் படிப்பு வாசனையில்லாத அக் காலத்தில் பெரிய தேசத்தலைவர்களின் பேச்சுகளைக் கேட்டோ, செய்திப் பத்திரிகைகள் படித்தோ சுதந்திரப் போராட்டத்தில் மக்கள் ஈடுபடவில்லை. எழுதப்படிக்கத் தெரியாத சுமார் எண்பது சதவீதம் மக்கள் அந்நியராட்சியில் வெறுப்புக் கொள்ளவும் விடுதலைப் போராட்டத்தில் ஈடுபடவும் தூண்டியவை இம்-மாதிரியான நாடகங்களே. நூறு இதழ்களில் எழுத முடியாத, ஆயிரம் மேடைகளில் கூற முடியாத செய்திகளை இந் நாடகங்கள் மிக எளிதாகச் சாதித்தன.

படித்த பாமர மக்களின் உணர்ச்சிகளைத் தட்டியெழுப்பி அந்நிய ஆட்சிக்கு எதிராக எழுச்சியுடனும் தீரத்துடனும் மக்களைக் கிளர்ந்தெழச் செய்தவர்கள் நாடகக் கலைஞர்களே. இதில் முதன்மையாக நிற்பவர் நடிப்பதிலும் பாடுவதிலும் சிறந்து விளங்கிய தியாகி விஸ்வநாததாஸ் அவர்களே.

இந்தக் காலத்து நடிகருக்குப் பாடத் தெரிந்திருக்க வேண்டுமென்ற கட்டாயமில்லை. ஆனால் அந்தக் காலத்து நாடக நடிகருக்கு அழகிய முகம், நல்ல உடற்கட்டு இவற்றோடு இனிமையான குரல் வளமும் இருக்கவேண்டும். உரையாடுவதோடு பாடுவதிலும் மிகச் சிறந்து விளங்க வேண்டும். அப்படிப்பட்ட நடிகர்தான் ராஜபார்ட் ஆக நாடகங்களில் நடிக்க முடியும். பாமரமக்கள் உரையாடல்களை விடவும் இப்பாடல்களைக் கேட்பதில்தான் மிகுந்த ஆர்வம் காட்டினர். சில நாடகப் பாடல்கள் மிக நீண்ட பாடல்களாக உள்ளன. எனவே இத்தகைய தகுதிகளைக் கொண்டிருந்த தியாகி விஸ்வநாததாஸ் மக்கள் மனத்தில் இடம் பிடித்ததில் ஆச்சரியமில்லை.

தமிழக மக்கள் மிகவும் தெய்வ நம்பிக்கை உடையவர்கள். அதிலும் முருகக் கடவுளைப் பயபக்தியோடு வணங்கக் கூடியவர்கள். வள்ளி திருமணம் நாடகத்தில் முருகக் கடவுளே வந்து வெள்ளையர்களுக்கு எதிராகத் தனது பக்தப்பெருமக்களைப் போராடுமாறு கேட்டுக் கொள்ளும் யுக்தியைக் கையாண்டு மக்களிடம் விடுதலை ஆர்வத்தைப் பொங்கியெழச் செய்தவர் தியாகி விஸ்வநாததாஸ்.

அன்று முதல் இன்று வரை எத்தகைய போராட்டமானாலும் அதில் சாதாரண மக்களின் பங்கே மிக முக்கியமானது. நவீன போக்குவரத்துச் சாதனங்கள், தொலைத் தொடர்புச் சாதனங்களான வானொலி, பதிவு நாடா, தொலைக் காட்சிப் பெட்டி இல்லாத அக் காலத்தில் நாட்டுப் புறத்துச் சாதாரண மக்களைப் பரவசப்படுத்தியதோடல்லாமல் விடுதலைப் போராட்டத்தில் வீரத்தோடு போராடவும் வைத்த பெருமை இவரையே சாரும்.

மாபெரும் தேசத்தலைவர்களின் செய்திகள், இந்நாடகக் கலைஞரின் மூலமாகவே பாமரமக்களை எட்டின. விடுதலை வேட்கை பெறவும், காந்தி மகானைப் பற்றித் தெரிந்து கொள்ளவும், கதர் இயக்கம் வெற்றி பெறவும் இவரது நாடகத் தொண்டே காரணம்.

பாடுவதற்கு மைக் இல்லாத அந்தக் காலத்தில் பாடுகிறவர் ஓங்கிப் பாடவேண்டும். ஆர்மோனியம் வாசிப்பவர் ஐந்து கட்டைச் சுருதியில் பாட வேண்டும். அப்படியானால் தான் அது எல்லாமக்களுககும் கேட்கும். இவ்வாறெல்லாம் உற்சாகத்தோடும் உணர்ச்சிப் பெருக்கோடும் நடித்ததின் மூலமும் பாடியதின் மூலமும் மக்கள் தூக்கம் மறந்து விடிய விடிய இவரது நாடகங்களைப் பார்த்து மகிழ்ந்தனர்.

ஆங்கில அரசு தடை விதித்த பல பாடல்களை இந்நாடக மேடைகளில் பாடியதால் சிறை செல்ல நேர்ந்தது; அதன் காரணமாக நாடகத் தொழில் வெகுவாகப் பாதிக்கப் பட்டது. இவ்வாறு நாட்டுப்பற்றோடு நடிகர் ஒருவர் 29 முறை சிறை சென்றதாக உலக வரலாற்றில் இல்லை. அதே போன்று சாதாரணக் குடும்பத்தில் பிறந்த ஒருவர் தன் வீட்டை மறந்து தாய் நாட்டுக்காகத் தன் குடும்பத்தினரை வறுமையில் வாட விட்டதாகவும் வரலாறு இல்லை.

அந்நிய ஆட்சியின் அடக்குமுறை நடவடிக்கைகளைக் கண்டு அஞ்சாமல் நாடகம் நடத்திச் சிறை சென்று தனக்கும் தன் குடும்பத்திற்கும் நேர்ந்த துன்பங்களைக் கூடப் பொருட் படுத்தாமல் நாடகத்துறை மூலம் இந்திய விடுதலைக்கு இவர் ஆற்றியிருக்கும் தொண்டு அளப்பரியது.



# 30. அலை கடலாகப் பொங்கிய ஆர்வலர் கூட்டம்

> ''தக்கார் தகவிலர் என்ப (து) அவரவர்
> எச்சத்தாற் காணப் படும்,'' –குறள்

தனது முப்பதாண்டுகால நாடக வாழ்க்கையில் தமிழகத்தின் முக்கிய நகரங்களில் அதாவது சென்னை, மதுரை, திருநெல்வேலி, நாகர்கோவில், தூத்துக்குடி, கோவில்பட்டி, சின்னமனூர், மேலூர் போன்ற பல்வேறு இடங்களிலும், கடல் கடந்து சிங்கப்பூர், பினாங்கு, இலங்கை, பர்மா போன்ற வெளிநாடுகளிலும் நாடகங்கள் நடத்தியுள்ளார், விஸ்வநாத தாஸ்.

தமிழ் நாட்டில் இவரது நாடகங்களுக்கு இவ்வாறு விளம்பரம் செய்வார்கள் எனத் 'தமிழ் நாடகக் கலைமணிகள்' என்ற நூல் கூறுகிறது: ''ஜெகமெங்கும் புகழ் பெற்ற வீர, தீர, பராக்கிரம ராஜாதி ராஜன், ராஜமார்த்தாண்டன், கடல் கடந்து சிங்கப்பூர், பினாங்கு, இலங்கை, பர்மா ஆகிய நாடுகளில் வெற்றிக் கொடி நாட்டிய சிங்கம் ... ... கானவேலன், சங்கீத சாகித்ய, ஞான விடுதலை வீரர், தியாகச் செம்மல் விஸ்வநாததாஸ் வந்து விட்டார். ஒரே ஒரு ஸ்பெஷல் நாடகம் இச் சமயம் தவறினால் மறு சமயம் வாய்ப்பதரிது. ஏமாந்து போகாமல் முன்னிடம் தேடுங்கள்...... காணத்துவறாதீர்கள். தரை நான்கு அணா. பெண்களுக்குத் தனி இடம் உண்டு.''

ஊர் தோறும் நாடகம் நடக்கும், மேடை தோறும் இவருடைய தேசியப் பாடல் தவறாமல் இருக்கும். இரவு எவ்வளவு நேரமானாலும் இவரது தேச பக்திப்பாடல்களைக் கேட்க விரும்புவர். 144 தடை விதித்தாலும், எத்தனை மைல் தூரமென்றாலும், இவற்றையெல்லாம் பொருட்படுத்தாமல் நாடகம் காணச் செல்வர். சில சமயங்களில் இவர் நாடகங்களுக்கு அனுமதிச் சீட்டு கிடைக்காமல் மக்கள் திரும்புவதும் உண்டு.

நாடகத்தைக் கண்டுகளிக்கும் மக்கள் இவர் பாடும் பாடல்களைக் கேட்டு, அப் பாடல்களின் பொருளுணர்ந்து, கையொலி எழுப்புவர்; ஆடுவர் மகிழ்ச்சிக் கூத்தாடுவர்.

பலர் காந்தியடிகளின் கொள்கைகளை ஏற்றுக் காங்கிரசிலே தங்களை இணைத்து விடுதலைப் போராட்டத்திலே ஈடுபட முன் வந்தனர் என்றால் இவர் பாடல்கள் எத்தகைய ஈர்ப்பு சக்தி வாய்ந்தவை என்பதைப் புரிந்து கொள்ளலாம். ''நல்ல நூல்களைவிட நாடகங்களிலிருந்துதான் நான் முழுமையான உணர்வு பெறுகிறேன்'' என்றான் கதே. ஆம். இவர் போன்ற நாடகக்கலைஞர்களின் நாடகம் பார்த்தே.

தமிழகத்தின் மிகச் சிறந்த பொதுவுடைமைச் சிந்தனையாளராக விளங்கிய ப. ஜீவானந்தம் அவர்கள் நாடகம் மிகவும் செல்வாக்குள்ள கலை வடிவம் என்பதை உணர்ந்து அதன்மூலம் தன் கருத்துகளைப் பெரிதும் பரப்ப முயன்றார். அவர்காலத்து நாடகக் கலைஞர்களோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார் என்பதை எழுத்தாளர் தொ. மு சி. ரகுநாதன் குறிப்பிடுகிறார்: ''இளமைக் காலத்திலிருந்தே ஜீவாவுக்கு நாடக ஈடுபாடு இருந்தது. ''ஞான பாஸ்கரன்'' நாடகத்தை எழுதிப்பள்ளிப் பருவத்தில் நடித்தார். நாடக உலக தேச பக்தரான விஸ்வநாததாசின் பாடல்கள் மீது ஜீவாவுக்கு மிகுந்த மோகம். ஒருமுறை அவர் ஒழுகின சேரியில் தமது தமக்கை வீட்டில் வந்து தங்கியிருந்த போது, நாகர்கோவிலுக்கு வந்திருந்த விஸ்வநாததாசை நேரிலேயே போய்ச் சந்தித்துப் பேசினார். அவருக்குச் சில நாடகங்களையும் எழுதிக் கொடுத்தார்.''

விஸ்வநாததாசின் தேச பக்தி கண்டு ஆங்கில அரசாங்கம் அஞ்சியது. இவரது பாடல்கள் ஆட்சியாளருக்குச் சிம்ம சொப்பனமாக விளங்கின. இவர் தோற்றுவித்த விடுதலை உணர்வு கலை உலகத்தைப் பெரிதும் கவர்ந்தது.

'கதரின் வெற்றி' நாடகத்தில் டி. கே. முத்துச்சாமி நடித்துப் புகழ் பெற்றார். பின்னர் இந்நாடகம் 'கதர் பக்தி' என்னும் பெயரோடு தமிழ் நாடெங்கும் நடத்தப் பெற்றது. முன்னாள் தமிழக முதல்வர் மாண்புமிகு எம். ஜி. ஆர். அவர்கள் இந் நாடகத்தில் நடித்திருக்கிறார்.

ஔவை டி. கே. சண்முகம் ''பாணபுரத்து வீரன்'' என்ற நாடகத்தில் நடித்தார் இந்நாடகம் அரசாங்கத்தால் தடை செய்யப்பட்டதால் ''தேச பக்தி'' என்னும் பெயரில் மாற்றி யமைக்கப்பட்டது. மகாகவி பாரதியின் பாடல்கள் இடையிடையே புகுத்தப்பட்டன காந்தி மகான் கதையை வில்லுப்பாட்டாகக் கலைவாணர் என் எஸ். கிருஷ்ணன் இந் நாடகத்தில் பாடியுள்ளார்.

நாட்டு விடுதலையை மையமாக வைத்துக் கோவை அய்யாமுத்து, 'இன்பசாகரன்' என்னும் நாடகத்தை எழுதி-னார். நவாப் டி. எஸ். ராசமாணிக்கம் 1936 முதல்தொடர்ந்து ஆறு மாத காலம் இந் நாடகத்தை நடத்தினார். எம். என். நம்பியார் 'கவியின் கனவு' நாடகத்தை 1944-ல் மேடை யேற்றினார். இந் நாடகம் தமிழ் நாட்டின் அனைத்துப் பகுதிகளிலும் ஈராயிரம்முறை நடிக்கப்பெற்றது.

''அரசின் அடக்குமுறைக்கு அஞ்சாமல் தேசிய நாடகங்களை மேடையேற்றிப் பெருந்தொண்டு செய்தவர், முத்தமிழ் கலா வித்வரத்தினம் ஔவை டி கே. சண்முகம் அவர்கள். இவர் எடுப்பான குரலில் பாடும் ஆற்றலும் ஆவேச மாக நடிக்கும் திறனும் கொண்டவர். இருபதாம் நூற்றாண்டு தமிழ் நாடகத்துறையில் ஔவை. சண்முகத்துக்கு இணையாக ஒருவரைச் சுட்டிக் காட்ட இயலாது'' என்கிறார் கலைமாமணி முனைவர் இரா. கமலவேலன்.

இன்றும் பல்வேறு கலைஞர்களால் இப்பணி தொடர்-கிறது. தேசிய மற்றும் பல்வேறு சமூகப் பிரச்சினைகளுக்குக் கலையரங்கைப் பயன்படுத்தி வெற்றி பெற முடியுமென நிரூபித்துக் காட்டிய பெருமையும் விஸ்வநாததாஸ் என்ற இந் நாடகக் கலைஞரையே சாரும்.

# 31. தியாகியின் கொடி வழியினர் இன்று

> ''பஞ்சமும் நோயும் நின்மெய்யடியார்க்கோ?
> பாரினில் மேன்மை இனியார்க்கோ?'' —பாரதி

தியாகியின் குடும்பத்தினர் இவரது இளைய மகன் முத்தையா தாசைத்தவிர மற்றவர்கள் தற்பொழுது தூத்துக்குடியில் வசித்து வருகின்றனர். விஸ்வநாத தாசுக்கு ஐந்துமக்கள் மூத்தவர் சுப்பிரமணியதாஸ். இரண்டாவது பிச்சம்மாள். மூன்றாவது காசிநாதன். நான்காவது தங்கத்தாய் ஐந்தாவது மகன் முத்தையா தாஸ்.

தாசின் மூத்தமகன் சுப்பிரமணிய தாஸ் தந்தையின் மரணத்துக்குப் பிறகு தூத்துக்குடி மில் தொழிலாளர் சங்கக் கட்டடத்தில் சில மாணவர்களுக்குச் சங்கீதம் கற்றுக்கொடுத்து வந்தார். இதில் போதிய வருமானம் கிடைக்கவில்லை.

விடுதலை ஆர்வத்தைத் தூண்டும் புரட்சிப் பாடல்கள் பாடியதின் காரணமாக வேலூர்ச் சிறையில் தந்தை சிறைத் தண்டனையை அனுபவித்துக் கொண்டிருந்த வேளையில், தந்தை பாடிய அதே புரட்சிப் பாடல்களை மேடைகளில் முழங்கி ஆறுமாதச் சிறைத்தண்டனையை மதுரைச் சிறையில் துணிச்சலோடு அனுபவித்த அந்த சுப்பிரமணியதாஸ் தந்தை இறந்த பிறகு பித்துப்பிடித்தவர் போல் மனச்சுமை தாங்காமல் மருண்டார்.

தந்தையின் மரணம் ஏற்படுத்திய வறுமை வாழ்க்கையை நினைத்து நினைத்து மனம் நொந்து ஒரு நாள் இரவு படுத்த படுக்கையிலேயே மரணமாகிக் கிடந்தார்.

அவரது மனைவி கண்ணம்மா (வயது 80) தூத்துக்குடி பொன் சுப்பையா நகரில் இரு நூறு ரூபாய் வாடகை வீட்டில் தன்னுடைய இளைய மகனோடு வசித்து வருகிறார். திருமங்கலம் வீடு ஏலம் போனது பற்றி வருந்தும் இவர் பழைய காலப் பெருமைகளை நினைத்து அழுது கொண்டிருக்கிறார்.

பல ஆண்டுகள் முயற்சிக்குப் பிறகு 1964-ல் தான் கண்ணம்மாவுக்கு மத்திய அரசின் தியாகிகள் உத வித்தொகை கிடைத்தது. தற்போது அந்தத்தொகை ரூபாய் 1500/- ஆக உயர்ந்துள்ளது.

மூத்தமகள் பிச்சம்மாள் (வயது 76) பிரையன்ட் நகர் 5-ஆம் தெருவில் முன்னூறு ரூபாய் வாடகை வீட்டில் தனது பேத்தியுடன் குடியிருந்து வருகிறார். தந்தை வசதியோடு வாழ்ந்த காலத்தில் இவருக்குத் திருமணம். இவரது கணவர் தூத்துக்குடி ஆர். வி. மில்லில் வேலை பார்த்து வந்தார். மூத்த மகள் மீது அன்னபக் கொட்டிய தாஸ் தன் மகளுக்குத் திருமணத்தின் போது 40 பவுன் நகை போட்டிருக்கிறார். தந்தை இறந்த போது இவருக்கு வயது 21.

பழைய காலப் பெருமைகளைக் கண்ணீர் மல்க விவரிக்கிறார். தந்தை நாட்டுக் காற்றிய சேவையை நினை-த்துப் பெருமை கொள்கிறார். இன்றும் தந்தையை மலர் களால் அர்ச்சித்து வணங்கிவருகிறார்.

தூத்துக்குடி கீழச் சண்முகபுரம் பிராப்பர் தெருவில் மூன்றாவது மகன் காசிநாதன் வாடகை வீட்டில் பல ஆண்டு களாக வசித்து வந்தார். தந்தை இறந்த போது இவருக்கு வயது பதினான்கோ, பதினைந்தோ தான். தூத்துக்குடி ஆர். வி. மில்லில் 1942 முதல் தொழிலாளியாக வேலை பார்த்த இவர் இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு மறைந்து விட்டார். அவர் வசித்துவந்த அதே வாடகை வீட்டில் மனைவி பாப்பாத்தி அம்மாள், மகன் காசி விஸ்வநாதன் அவரது மனைவி இராசேசுவரி தற்போது இருந்து வருகின்றனர்.

மறைக்கப்பட்ட தாத்தாவின் புகழைக் காப்பாற்றுவதில் அதிக அக்கறை காட்டியும் திருமங்கலத்தில் அவர் வாழ்ந்த வீட்டை நினைவில்லமாக்குவதிலும் தீவிரமாக உள்ளார் தியாகியின் பேரன் காசிவிஸ்வநாதன்.



மூத்த மகன்
தியாகி சுப்பிரமணியதாஸ்



இரண்டாவது மகன்
காசிநாதன்



இளைய மகன்
முத்தையா தாஸ்



தியாகி சுப்பிரமணியதாஸ் அவர்கள் மனைவி
**கண்ணம்மா**



மூத்த மகள்
**பிச்சம்மாள்**



இளைய மகள்
**தங்கத்தாய்**

தாசின் இளைய மகள் தங்கத்தாய். இவரது கணவர் வடிவேல் ஒரு தியேட்டரில் இரவுக் காவலராகப் பணியாற்று-கிறார். தற்சமயம் எழுபது வயதைக் கடந்து விட்ட இவர் பழைய நாடக நடிகர். நைனார் ஆசாரிவிளை மேற்குத் தெருவில் 350 ரூபாய் வாடகை வீட்டில் குடியிருந்து வருகின்றனர். உதவித் தொகையாக ரூபாய் 750/- பெறு-கிறார். இவரும் இவரது கணவரும் சேவாதளத் தொண்டர்களாகப் பணியாற்றியுள்ளனர்.

தியாகியின் இளைய மகன் முத்தையா தாஸ் சாத்தூரில் கடிகார ரிப்பேர் தொழில் செய்து வந்தார். தற்போது வீட்டில்தான் இருக்கிறார். உதவித் தொகையாக மாதந் தோறும் ரூபாய் 750 - பெறும் இவர் வீட்டு வாடகையாக ரூபாய் 300/- கொடுக்கிறார். இவருக்கு 3 பையன்கள் 4 பெண்கள். ஒரு பையனுக்கும் ஒரு பெண் ணுக்கும் இன்னும் திருமணமாகவில்லை. மிகுந்த வறுமை நிலையில் உள்ளார்.

காசிநாதன் பலமுறை முயன்றதின் காரணமாக அப்-போது முதல்வராக இருந்த மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்கள் காசிநாதன், பிச்சம்மாள், தங்கத்தாய், முத்தையா தாஸ் ஆகிய நால்வருக்கும் 50 ரூபாய் வீதம் உதவித்தொகை வழங்க உத்தரவிட்டார். பின்னர் அத் தொகை 150 ரூபாயாக உயர்ந்தது. தற்போது 750/- ரூபாயாக உயர்ந்துள்ளது. காசிநாதன் இறந்தபின் அவர் மனைவிக்கு உதவித் தொகை கிடைக்கவில்லை.

வறுமை நிலையில் இருந்து வரும் தியாகியின் சந்ததியினர் அரசாங்கம் அளித்து வரும் இந்த உதவித் தொகை கொண்டுதான் உயிர்வாழ்ந்து வருகின்றனர். இல்லையேல் அவர்கள் என்றோ மாண்டு போயிருப்பர்!

குடியிருக்கச் சொந்த வீடும் போதுமான வருமானமும் இன்றி வறுமைச் சூழலில் வாழ்ந்து வரும் இவர்கள் அரசாங்கம் தங்களுக்கு வீட்டு மனை, மற்றும் பிற சலுகைகள் செய்து தங்கள் குடும்பங்களைக் காக்க வேண்டுமென்று விரும்புகின்றனர்.

முதன் முதலில் இக் குடும்பங்களுக்கு உதவித் தொகை வழங்கி அதன் மூலம் இக் குடும்பங்களை உயிர் வாழச் செய்து கொண்டிருக்கும் டாக்டர் கலைஞர் அவர்கள், இக் குடும்பங்களுக்கு மேலும் தேவையான உதவிகள் செய்வார் என்று நம்புகிறோம்.

எஸ். எஸ் விஸ்வநாததாஸ் என்ற நடிகர், தேசபக்தி மிக்க தேசியவாதியாகத் திகழ்ந்ததோடு, தமது நாடகத்திற்கு அரசாங்கம் விதித்த தடையை மீறிச் சிறைத் தண்டனை பெற்ற தியாகியாகவும் விளங்கினார். நாடக மேடையைத் தேசியப் பாடல்மயமாக்கும் பாணியிலே பிற நடிகர்களுக்கு இவரே சிறந்த வழிகாட்டியாக விளங்கினார். 1919ல் பஞ்சாப்படுகொலை நடந்த போது அதனைக் கண்டித்து இயற்றப்பட்ட ''பஞ்சாப் படுகொலை; பாரிற் கொடியது பழிபாவமிக்கது'' என்ற பாடலைப் பாடிப்பாடி, நாட்டு மக்களுக்குத் தேசாவேசத்தை ஊட்டினார்.

நாடக நடிகர்களிலேயே தலை சிறந்த தேசியவாதியாகத் திகழ்ந்த விஸ்வநாததாஸ் திருமங்கலம் தாலுகா காங்கிரஸ் கமிட்டியில் அங்கம் வகித்தார். மதுரை ஜில்லா போர்டிலும் காங்கிரஸ் சார்பில் அங்கம் வகித்தார். தேசியப் பாசறையிலே மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்த நிலையில் திடீரென்று மரண மடைந்தார்!

– சிலம்புச்செல்வர் ம. பொ. சிவஞானம்

# 32. தியாகியின் புகழ் பாடும் அமைப்புகள்

| நன்றி கருது – பாரதியின் ஆத்திசூடி |
|---|

சென்னை சூளை தொட்டிக்கலை குமரப்ப முதலி தெருவில் தேசியக் குயில் விஸ்வநாத தாசின் நினைவைப் போற்றும் வகையில் விஸ்வநாததாஸ் இசைப்பேரவை என்ற அமைப்பு ஆர்.வி.எஸ் மணி என்பவரால் தொடங்கப்பட்டுச் செயல்பட்டு வருகிறது. ஒவ்வொரு ஆண்டும் சிறந்த இசைக் கலைஞர்களை வரவழைத்துப் பெருமைப்படுத்த வேண்டு-மென்பது இவரின் நோக்கம்.

டாக்டர் புலவர் விநாயகம் சென்னை சூளை மருத்துவர் சமூக அறக்கட்டளை சார்பில் 31–12–1985ல் சாந்தி திருமண மண்டபத்தில் தியாகியின் நூற்றாண்டு விழாவை யொட்டித் 'தியாகி விஸ்வநாததாஸ்' என்ற பெயரில் ஒரு நூல் வெளி-யிட்டுள்ளார். மேலும் இவர் விஸ்வநாததாஸ் கூட்டுறவு சிக்கன நாணய சங்கத்தின் செயலாளராகவும் இருந்து வருகிறார். விஸ்வநாத தாசின் புகைப்படத்தை நூற்றுக்-கணக்கில் அச்சிட்டு ஒவ்வொரு முடி திருத்தகத்திலும் மாட்டி வைக்க ஏற்பாடு செய்துள்ளார்.

விஸ்வநாத நாசின் ஏலம் போன வீட்டை மீட்டுத் தமிழக அரசு நினைவுச் சின்னமாக்க வேண்டும். ஒட்டேரியி-லுள்ள பாலத்திற்குத் தியாகியின் பெயரை வைக்க வேண்டு மென்பதும் அரசுக்கு இவர் விடுத்திருக்கும் வேண்டுகோள்கள் ஆகும்.

சென்னை சூளை மருத்துவர் சமூக அறக்கட்டளை நிர்வாகியாக இருந்து வரும் புலவர் விநாயகம், தாசின் புகழ் பரவ அரிய பணிகள் பல ஆற்றிவருகிறார்.

திருநெல்வேலி வண்ணாரப் பேட்டையில் அசோக் ஆட்டோ சர்வீஸ் நடத்திவரும் திரு S. முத்துராஜ் அவர்கள் மாநில விஸ்வநாததாஸ் தேசியப் பேரவைத் தலைவராயிருந்து சென்னை சத்தியமூர்த்தி பவனில் தியாகியின் திருவுருவப் படத்தைத் திறந்து வைக்கத் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவர் திருவாளர் குமரி அனந்தன் அவர்களுக்குத் துணை செய்திருக்கிறார். மேலும் சென்னையில் அவரது முழு உருவச் சிலை நிறுவவும் அயராது பாடுபட்டுக் கொண்டிருக்கிறார்.

பாளையங்கோட்டையைச் சேர்ந்த நல்லாசிரியர் திரு சு. செல்லப்பா அவர்கள் தாம் தலைமையாசிரியராயிருக்கும் பள்ளியில் தியாகியின் உருவப்படத்தைத் திறந்து மகிழ்ந்-திருக்கிறார்.

தமிழகத்தின் தலை சிறந்த பொதுவுடைமை வாதியாகத் திகழ்ந்த இலக்கியப் பேராசான் ஜீவா அவர்களும் கலை இலக்கியப் பெருமன்றத் தோழர்களும் விடுத்தவேண்டுகோளை ஏற்ற அப்போதைய திருமங்கலம் பேரூராட்சித் தலைவர் திரு. இரத்தினசாமித் தேவர் அவர்கள், பெரு முயற்சி செய்து திருமங்கலம் பேரூராட்சிக்குச் சொந்தமான திடலில் 'விஸ்வ நாததாஸ் கலை அரங்கம்' கட்டச்செய்தார்.

பொது நிகழ்ச்சிகள் மற்றும் கலை நிகழ்ச்சிகள் நடத்து வதற்கெனக் கட்டப்பெற்ற இவ் வரங்கைச் சுற்றியுள்ள திடல், தற்போது தனி நபர்களால் ஆக்கிரமிக்கப்பட்டு வீடுகள், தொழிற்கூடங்கள் கட்டப்பட்டுள்ளன. இக் கலையரங்கில் எந்த வொரு நிகழ்ச்சியும் தற்போது நடத்தப்படுவதில்லை,

விடுதலை மாளிகை வானுயர்ந்து நிற்கத் தன்னுடைய கலையுலக வாழ்க்கையை அர்ப்பணித்த தியாகி விஸ்வநாத தாசின் புகழ்பாடும் அமைப்புகள் இன்னும் நிரம்பத் தோன்றுதல் வேண்டும்.

தியாகியின் திருமங்கலம் வீட்டை நினைவுச் சின்னமாக்கவும் அவருக்கெனக் குரல் கொடுக்கவும் தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கம் மற்றும் சில பத்திரிகைகள் முனைந்திருப்பது பாராட்டிற்குரியது.

இவரது பெயரில் அமைப்புகள் நிறுவி மக்களுக்குப் பயன்படுகிற அளவில் நற்பணிகள் ஆற்ற முக்கிய பிரமுகர்கள் பெரியவர்கள், செல்வந்தர்கள், அரசு அலுவலர்கள், ஆசிரியர்கள், இளைஞர்கள் முன் வர வேண்டும்.

1996 ஆகஸ்ட் 15 முதல் கோவில்பட்டியில் ''தியாகி விஸ்வநாதநாஸ் நற்பணி மன்றம்'' என்கிற அமைப்பு செயல்படத்தொடங்கியுள்ளது. இந்நூல் உருவாக ஊக்குவித்து வெளியீட்டு விழாவுக்கும் துணை நிற்கிறது இம்மன்றம்.

ஒலி பெருக்கி இல்லாத அக்காலத்தில் ஆர்மோனியம் வாசிப்பவர் ஐந்து கட்டைச் சுருதியில் முழங்கிக் கொண்டிருப்பார். கழுகாசலம் சீன்படுதா தூக்கப்படும். மயில் வாகனத்தில் இருந்து விஸ்வநாததாஸ் உச்சஸ்தாயில் அற்புதமாகப் பாடுவார். திடீரெனத் தேசியப் பாடல் பாட ஆரம்பிப்பார். முருகன் வேடத்தில் மெல்லப் பாடுவார். காவல் அதிகாரிக்கு 'அது நாடகப்பாட்டா? அல்லது தேசிய பாட்டா?' என்று சரியாகக் காதில் விழாது. உடனே காவல் அதிகாரி ''கொஞ்சம் மேலே ஏறிப்பாடு'' என்பார். அதாவது குரலை உயர்த்திப் பாடச் சொல்லுவார். உடனே விஸ்வநாதாஸ் சீன் கட்டும் கம்பத்தில் சிறிது தூரம் ஏறித் தொங்கிக் கொண்டு பாடுவார். மக்களுக்கு இது ஆச்சரியமாக இருக்கும் மக்களின் வியப்பைப்புரிந்து கொண்டு அவர் கூறுவார் ''பெரியோர்களே! தாய்மார்களே! ,மயில் வாகனத்தில் ஏறவேண்டிய முருகன் கம்பத்தில் ஏறியிருக்கிறாரே' என ஆச்சரியப் படுகிறீர்களா? திருவாளர் காவல் அதிகாரிதான் கொஞ்சம் மேலே ஏறிப் பாடு' என்றார்கள். அதனால்தான் ஏறிக் கொண்டு பாடுகிறேன்'' என்பார்; காவல் அதிகாரி முகத்தில் அசடு வழியும்.

# 33. தியாகத்தின் மறுபெயர்

> ஒளிபடைத்த கண்ணினாய் வாவா
> உறுதி கொண்ட நெஞ்சினாய் வாவா – பாரதி

நாடக மேடையைத் தேசிய மேடையாக மாற்றி விடுதலைக்குக் குரல் கொடுத்த முதல் நாடகக் கலைஞர்இவரே 54 ஆண்டுகள் இம்மண்ணில் உயிர்வாழ்ந்து 30 ஆண்டுக் கலைப்பணியில் 29 முறை சிறை சென்றவர். பாரத மணிக் கொடி இம் மண்ணில் பட்டொளி வீசிப்பறக்கத், தான் மட்டு-மல்ல தன் குடும்பத்தையே நாட்டு விடுதலைப் பணியில் ஈடு-படுத்தியவர். வறுமையிலும் செம்மை காத்த குணக்குன்று.

பெற்ற தாயும் பிறந்தபொன் னாடும்
நற்றவ வானினும் நனிசிறந் தனவே''

என்ற பைந்தமிழ்ப் புலவன் பாரதியின் பாடலுக் கேற்பச் சுதந்திர வேள்வியில் தன்னை மாய்த்துக் கொண்ட மாவீரன். விடுதலைப்போர்க் களத்தில்] பாடிப்பறந்த பாட்டுக்குயில். தனது கம்பீரமான மணிக்குரலால் மக்களைச் சொக்கவைத்த பாடகர். பாரத அன்னையின் மணிமுடியில் பதிக்கப் பெற்ற பச்சைக்கல்.

ஆலய நுழைவு, சமபந்தி உணவு, தொழிலாளர் நலன் போன்றவற்றிலும் ஈடுபாடு கொண்ட சமுதாயப் போர்முரசு. தேச மானம் காக்கத் தன்னையே தீய்த்துக் கொண்ட மெழுகு வர்த்தி. தன் குடும்பம் தவிர வேறு சில குடும்பங்களையும் வைத்துக் காப்பாற்றிய மனித நேயப் பண்பாளர்.

மருத்துவ சமுதாயம் இந்திய விடுதலைப் போராட் டத்திற்கு அளித்த மாமணிதான் தியாகி விஸ்வநாததாஸ். மருத்துவ சமுதாயம் மார்தட்டிப் பெருமை கொள்ளு மளவில் இவ்வரிய பணியை நாட்டிற்கு அளித்திருக்கிறார்.

ஒட்டு மொத்த பாரத சமுதாய நலனுக்காகப் பாடு-பட்ட சட்டமேதை டாக்டர் அம்பேத்கார், பெருந்தலைவர் காமராசர், பசும்பொன் தேவர் திருமகன், செக்கிழுத்த செம்மல் வ. உ. சிதம்பரனார் இவர்களைப் போன்று பாரத மாதாவின் சேவைக்குத் தன்னை ஒப்படைத்த அப்பழுக்கற்ற தேசியவாதி இவர்.

## நெஞ்சம் சுமக்கும் சில நினைவுகள்

O நாட்டு விடுதலைக்குத் தன்னை அர்ப்பணித்த தியாகி விஸ்வநாததாஸ் திருமங்கலத்தில் வாழ்ந்த வீட்டை நினைவில்லமாக்கத் திருமங்கலம் நகராட்சியில் மூன்று முறை தீர்மானம் நிறைவேற்றப்பட்டு அரசின் பார்வைக்கு அனுப்பப் பட்டுள்ளது- இது செயல் வடிவம் பெறவேண்டும்.

O இப்போது சென்னையில் இவரது முழு உருவச்சிலை நிறுவுவதற்கு முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. சென்னை மாநகராட்சி சிலை நிறுவுவதற்கான அனுமதி வழங்க வேண்டும்.

O நாட்டு விடுதலையை உயிர் மூச்சாகக் கொண்டு வாழ்ந்த அந்த உத்தமத்தியாகியின் திருவுருவப்படம் அரசு அலுவலகங்கள், பள்ளிகள் இவற்றில் இடம் பெற வேண்டும்.

O ஆண்டு தோறும் இவரது பிறந்த நாள் அரசின் சார்பில் கொண்டாடப்பட வேண்டும். அதே போன்று ஆண்டு தோறும் இவரது நினைவு நாளும் அரசால் நினைவூட்டப் படவேண்டும்.

O தியாகியின் பெயரில் நினைவு மண்டபமோ, நினைவுத் தூணோ, வளைவோ ஏற்படுத்த வேண்டும்.

O அரசுக் கட்டடங்கள், நிறுவனங்கள் இவற்றிற்கு இவரது பெயரைச் சூட்டவேண்டும்.

O பள்ளி, கல்லூரி அளவில் இவரது வாழ்க்கை வரலாறு பாடமாக வைக்கப்பட வேண்டும்.

இவ்வாறு செய்வதன் மூலம் தியாகி விஸ்வநாத தாசுக்குப் புதிய பெருமை எதுவும் வந்து விடப் போவதில்லை என்றாலும் இவரது வரலாறு, எதிர்காலச் சமுதாயத்துக்கு ஏற்றதொரு வழி காட்டும்; ஒளி கூட்டும்.

இளைய தலைமுறை என்றென்றும் நாட்டுப் பற்றுடன் வாழ இயலாய், இசையாய் நாடகமாய் வாழ்ந்து காட்டிய உத்தமரிவர். மின்மினியாய்த் தோன்றிய ஒரு கலைஞன் இசையால், நாட்டுப்பற்றால், தியாகத்தால் சூரியனாய் மாறிய வரலாறுதான் விஸ்வநாததாசின் வாழ்வாகும்.

புரட்சியின் ஊற்றுக் கண்களாய்த் திகழ்ந்த வால்டேர், லெனின், ரூசோ, வீரசாவர்க்கார் இவர்களின் வரிசையில் இவரும் ஒரு புரட்சியாளர்.

தியாகத்தின் மறு பெயராய் வாழ்ந்த விஸ்வநாததாசின் புகழ் சுமக்கத் தோள்கொடுப்போம்.

''பாரத பூமி பழம்பெரும் பூமி
நீரதன் புதல்வர் இந்நினை வகற்றாதீர்''.





மயிலூர்தியில தியாகியின்
இறுதி ஊர்வலம்

அறுபது ஆண்டுகளுக்கு முன்பு
தமிழ் நாட்டு நாடக மேடைகளில்
சுதந்திரக் கனலைச்
சுடர் விட்டு எரியச் செய்த
நாடகக் கலைஞர்
வீரத் தியாகி
**எஸ். எஸ். விஸ்வநாததாஸ்** அவர்களின்
தேசியப்பாடல்கள் இதோ ... ... ... ... ...



## 1. கொக்குப் பறக்குதடி பாப்பா

கொக்குப் பறக்குதடி பாப்பா நீயும்
கோபமின்றிக் கூப்பிடடி பாப்பா ... ... (கொ)

கொக்கென்றால் கொக்கு நம்மைக்
கொல்ல வந்த கொக்கு
எக்காளம் போட்டு நாளும் இங்கே
ஏய்த்துப் பிழைக்குதடி பாப்பா ... ... (கொ)

வர்த்தகம் செயய வந்த கொக்கு நமது
வாழ்வைக் கெடுக்க வந்த கொக்கு
அக்கரைச் சீமை விட்டு வந்து ... ... கொள்ளை
அடித்துக் கொழுக்குதடி பாப்பா ... ... (கொ)

தேம்ஸ் நதிக்கரையின் கொக்கு அது
திண்ண உணவில்லாத கொக்கு பொல்லா
மாமிச வெறிபிடித்த கொக்கு இங்கே
வந்து பறக்குதடி பாப்பா ... ... ... (கொ)

கொந்தலான மூக்குடைய கொக்கு அது
குளிர்பனி கடல் வாசக் கொக்கு
அந்தோ பழிகாரக் கொக்கு நம்மை
அடக்கி ஆளுதடி பாப்பா ... ... ... ... (கொ)

மக்களை ஏமாற்ற வந்த கொக்கு அதன்
மமதை அழிய வேண்டும் பாப்பா
வெட்க மானமில்லா அந்தக் கொக்கு இங்கே
மடியப் பறக்குதடி பாப்பா ... ... ... (கொ)

பஞ்சாபில் படுகொலை செய்த கொக்கு அது
பழிபாவம் பார்க்காத கொக்கு
அஞ்சாமல் பாஸ்கரன் தமிழ்பாடி அதை
அடித்து விரட்ட வேண்டும் பாப்பா ... ...(கொ)

## 2. கதர்கப்பல்

பல்லவி

கதர் கப்பல் கொடி தோணுதே
கரம் சந்த்ர மோகனதாஸ் காந்தி இந்தியா சுதேச (கதர்)

அநுபல்லவி

அதற்கப்பால் ஞானாகாசம்
அதிலே பாரதவாசம்
இதற்குள் சிவ ப்ரகாசம்
இனி நமக்குச் சந்தோசம் (கதர்)

சரணம்

மானிடச் சிப்பிக் குள்ளே
மகாத்மா ஓர் முத்துப் போலே
ஞான வடிவம் கொண்டு
நம்மைக் காக்க வந்த தாலே (கதர்)

லௌகீகம் விட்டால்
வைதீகம் பெற்றால்
மெய்தேகம் நாம்
நன்றாய்க் கொள்வோம் நாகரீகம் (கதர்)

பஞ்சத்தைப் பஞ்சால் வெல்வோம்
படையை உடையால் கொல்வோம்
வஞ்சத்தை விட்டகல்வோம்
மறை நேர்க்கும் இந்த
முறையேற்கும் மகாத்மா
உரைகாக்கும் நம்
மனைமக்கள் மானங் காக்கும் (கதர்)

## 3. தேசபக்தி வேண்டுகோள்

இராகம் - இந்துஸ்தான் - தோடி

பல்லவி

தேசாபிமானிகளே-உண்மைத் தெய்வீகஞானிகளே-தமிழ்
பாஷாபிமானிகளே - ஜென்மப் பாரத தியானிகளே - (தே)

மகுடம்

தீதற்றிடு தாதாபாய்மந்திர மீதுற்றிடு மாதாரத்தந்திர; (தே)
திலகப் பிரபுக்கருமை பணிவிடை உலகில் நல்பெருமை
கென தடை

ஜெகத்தில் மிகுத்த சுகத்தை வகுத்த - (தே)
மகத்வமனைத்தும் பறிக்கச் சகித்த ... ... (தே)

தியாகனம் யூகமே நிரம்பிய
யோகனம் கோகலேவிரும்பிய (தே)

கெஜல்

ஆசாரம் தனைவிடுத்து ஆங்கிலத்தைப் படித்தோம்
அயல் நாட்டு நடையுடையை
ஆசையுடன் பிடித்தோம்
கூசாமல் மது வகையைக் குடல் நிறையக் குடித்தோம்
கொடியருடன் கைகோத்துக்
குளிர்நிலவில் நடித்தோம்
நேசானு பூதி தெய்வ நிந்தனையில் தடித்தோம்
நெஞ்சாரப் பொய்யுரைத்து
நீதி மன்றை யிடித்தோம்
காசாசையால் பலதுற் காரியங்கள் முடித்தோம்
கடையரென்றே நம்மில் சிலரைக்
கடிந்து விழுந்தடித்தோம்

பாட்டு

கண்டதே காட்சி கொண்டதே கோலம்
என்றிது நாள் கழித்தோமே
கைத்தொழில் வர்த்தக யுக்த முறைத்துறை
காணாமல் விதித்தோமே. (தே)

## 4. தாழ்த்தப்பட்ட சோதரர்

பல்லவி

தாழ்த்தப்பட்ட சோதரரைத் தாங்குவாருண்டோ?
தாங்குவாருண்டோ? மண்ணில் ஓங்குவாருண்டோ? (தா)

அநு பல்லவி

வீழ்த்தப்பட்டு வாடுகின்றார்
வெம்பியே திண்டாடுகின்றார்
பாழ்த்தமனப் பாவியர்செய் பாதகத் தாலே
பாதகத் தாலே இத்த மேதினி மேலே (தா)

தொகையறா

இருக்கவும் இடமில்லை நிற்கவும் நிழலில்லை
என நொந்து வாடியழுறார்
இல்லமொன்றில்லாது அல்லலே வடிவமாய்
ஏங்கியே ஏங்கி விழுறார்
நெருக்கவும் பண்ணையார் குடிக்கவும் நீரின்றி
நிட்டுரத்தால் கதறுறார் - கொஞ்சம்
நெஞ்சிரக்கமில்லா வஞ்சகக் கொடியரை
நினைந்துதான் பதறுறார்
சுருக்கவும் உடம்பினைப் பெருக்கவும் வியர்வை நீர்
கஷ்டக் கண்ணீர் வடிக்கிறார் - அவர்கள்
காலமெல்லா முழைத்திங்குக் கூலி பெறமாட்டாது
கலங்கி நித்தமும் துடிக்கிறார்
இருக்கவும் பொறிகள் போல் அடக்கவும் உணர்வினைத்
தீயவர்களால் நலிகிறார்
செத்திடவு மொண்ணாது நித்தமுமடிமைகளாய்த்
தீண்டாமையால் நலிகிறார்

அநு பல்லவி எடுப்பு

பள்ளுப் பறையரென்னும் பாமரரைக் காக்கவென்னும்
கொள்கையிலும் புண்ணியந்தான் குவலய மீது
குவலய மீது வேறு கூறுவிரேது. (தா)

## 5. பஞ்சாப் படுகொலை

ராகம் - ஹரிகாம்போதி தாளம் : ஆதி

பூங்கா விநோதமே என்ற பாடல் மெட்டு

பல்லவி

பஞ்சாப் படுகொலை பாரில் கொடியது
பழிபாவ முடையது (பஞ்)

அனு பல்லவி

அஞ்சாப் பெரும் வம்பனாம் சிறியவன்
அறநிலைதப்பிய சிறியவன் வேலை (பஞ்)

சரணங்கள்

அயல் தேசத்தார் அநியாயத்தால்
செயல் மாயத்தால் மாண்டு மடிந்தது (பஞ்)

அண்டையில் நின்றவர் துண்டமாக வெ
குண்டு மடிந்திட குண்டுகள் பட்டது (பஞ்)

படைக்கலத்தினால் அடக்கலாமென
மடக்கருத்துடன் கிடக்கலமாமிது (பஞ்)

படுக்கவைத்து கைமடக்கி வைத்துடல்
நடுக்கமுற நகத்தூசி குத்தின (பஞ்)

பங்க மிகுந்து பயங்கொள அத்தோ
அங்கு முறிந்து ரணங்கள் நிறைந்தது (பஞ்)

கற்புக் கரசிகள் பொற்பழிந்திட
கற்பனை செய்தது செப்பத்தரமல (பஞ்)

கண்ணீர் விட்டுக் கதறிக் கதறித்
தண்ணீர் கேட்டுச் சாய்ந்து மடிந்தனர் (பஞ்)

தாயுந் தந்தையுஞ் சேயிழந்துமே
தரையில் புரண்டு அலறித் துடித்தது (பஞ்)

ஏந்திழையாரிடச் சேலையுரிந்து
சாய்ந்திடவே வெகுகோரமிருந்தது (பஞ்)

இந்தியர்கள் வருந்தி அலைந்திட
நொந்து கலங்கிட அந்தோ செய்தது (பஞ்)

ரத்த ஆறு பெருக்கெடுத் தோடிட
சித்ரவதையே மிகுந்திடச் செய்திட (பஞ்)

தேச நேச விஸ்வாசன் பாஸ்கர
தாசன் ஓதினேன் மோசம் மோசமே (பஞ்)



## 6. பஞ்சாப் கொடுமை

கொடுமை கொடுமை கொடுமையே பஞ்சாபில் நடந்த
கொடுமை கொடுமை கொடுமையே (கொடுமை)

கடுமையான ராணுவச் சட்டம்
கஷ்டமான தென்பது திட்டம்
அடிமையாக வாழவா இஷ்டம்?
அநியாய மாகவே அவதிப் பட்டோம். (கொடுமை)

நிருவாணமாய்ப் பெண்களை நிறுத்தி
நினைக்க முடியா அவமானப்படுத்தி
நெஞ்சால் கடத்தி வீதி கிடத்தி
நிமிரச் சவுக்கால் அடித்தான் துரத்தி (கொடுமை)

பட்டோம் பட்டோம் துயராமன்றே
பார்லிமெண்டார் கூப்பிட நின்றோம்
சுட்டேன் சுட்டேன் சுட்டே னென்றான்
சுடு மருந்துள்ள மட்டும்
சுட்டே னென்றான் (கொடுமை)



## 7. கெருவம் மிகுந்த நீலன்

பாட்டு

கெருவம் மிகுந்த நீலன் மகாக்
கேவலக் கொடுங்கோலன் - அவன்
உருவத்தை இந்த ஞாலம்
உடைத் தெறிவது தான் சீலம் (கெ)

தருமம் மிகுந்த சென்னையில்
சண்டாள னான நீலனின் சிலை
நிரந்தரமாய் நிற்பதோ? இந்
நிலையை நாம் சகிப்பதோ? (கெ)

தொகையறா

ஆயிரத்தி எண்ணூற்றி ஐம்பத்தி ஆறாம்
ஆண்டு ஜுன் மாதம் நான்காம் தேதி
ஸ்ரீ காசிக் கிளர்ச்சிக்குப் பின் ஜெனரல்
நீலன் இரத்த வெறித் திமிர் மீறியே
தூயகுணச் சீக்கியர் வாழ் கிராமமெங்கும்
வெள்ளைத் துருப்புகள் தமை யேவினான்
தாயென்றும் சேயென்றும் தள்ளாத கிழவரென்றும்
தயவு தாட்சண்ய மின்றியே (கெ)

தாக்கிப் பல நூறு உயிர்களைப் போக்கிப்
பலபேர் உடலைச் சாலை மரக்கிளைகள் தோறும்
தூக்கிலிட்டே மாட்டித் தொங்கவிட்டும்
பலரைத் துரத்தித் துரத்திக் கொன்றும்
தீக்கிரையாய் ஆக்கிச் செல்லும் திசையனைத்தும்
பிணக்காடாய்ச் செய்தான் - அந்தப்
போக்கிரிக்குச் சிலையெடுத்துப்
போற்றுவதை இந்தியர் நாம் பொறுக்கலாமோ?
(கெ)

பாட்டு

தணியாக் கொலைவெறி கொண்டவன்
தயை தாட்சண்யம் இல்லாதவன்
மனிதாபிமான மற்றவன் பல
மக்கள் உயிரைப் பறித்தவன்
துணிவோடு ஒன்று கூடுவோம் அவன்
துரோகச் செயலைச் சாடுவோம்
அநியாயக்காரன் சிலைதனை
அடியோடு நொறுக்கிப் போடுவோம். (கெ)

---

## இப் பாட்டிற்கான விளக்கம்

கி. பி. 1857 வாக்கில் இந்தியா முழுவதும் ஆங்கில ஆட்சி வேரூன்றிவிட்டது. அக்கால கட்டத்தில்தான் ஆங்கில ஆட்சியை எதிர்த்து முதல் இந்திய சுதந்திரப் போர்ஏற்பட்டது

அப்போது நீலன் என்பவன் ஆங்கிலப் படையின் ராணுவத்தளபதியாயிருந்தான். அவன் செய்த கொடுமைக்கு அளவேயில்லை. வட இந்தியாவில் நூற்றுக் கணக்கான கிராமங்களைச் சூறையாடினான்; தீயிட்டுக் கொளுத்தினான் கண்ணெதிரே கண்ட மக்களை யெல்லாம் கொன்றுகுவித்தான் மரக்கிளை தோறும் பிணங்களைத் தொங்க விட்டான்; நூற்றுக் கணக்கான பிணங்களைக் குழியில் தள்ளி பெட்ரோல் ஊற்றி எரித்தான்.

அத்தகைய கொடியவனுக்குப் பிற்காலத்தில் ஆங்கில ஆட்சி சென்னை மௌன்ட்ரோட்டில் (அண்ணாசாலை) இன்று அண்ணா சிலை இருக்கு மிடத்தில் சிலை வைத்துக் கொண்டாடியது. அந்தச் சிலையை அகற்ற வேண்டுமென்று தேசியத் தலைவர்கள் எல்லோரும் கிளர்ச்சி செய்தார்கள்.

அந்தக் கொடுங்கோலனின் சிலையை அகற்ற வேண்டுமென்ற அந்தக் கிளர்ச்சிக்கு ஆதரவாக நாடக மேடைகள் தோறும் ஒரு பாடல் முழங்கியது. மதுர பாஸ்கரதாஸின் அப்பாடலை விஸ்வநாததாசும் பாடினார்.

நீலன் சிலை எதிர்ப்புப் போராட்டம் தமிழகமெங்கும் நெடுநாள் நடந்தும் அன்று தமிழகத்தில் ஆட்சியிலிருந்த ஜஸ்டிஸ் கட்சி ஆட்சி, சிலையை அகற்ற எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை. 1937 ல் ராஜாஜி தலைமையில் காங்கிரஸ் ஆட்சி அமைந்த அன்றிரவே நீலன் சிலை அகற்றப்பட்டது.

## 8. ஆங்கிலப் பேய்கள்

ஆங்கிலப் பேய்களெல்லாம்
திரண்டு கொண்டாடுது லண்டனிலே (ஆங்)

ஓங்கும் சுயாட்சிப் படைகண்டு
திமிர்வெறி ஏறுது மண்டையிலே (ஆங்)

டயரென்ற பேர்படைத்த ஒரு பேய்
டம்பமாய்ப் பேசு தங்கே
பயரென்ற உத்தரவைச் சர்ச்சில் பேய்ப்
போட்டு மிரட்டு திங்கே (ஆங்)

லாயிட் ஜார்ஜ் எனும் ஒரு பேய்
லண்டனை ஆட்டிப்படைக்குதங்கே
பாரெட்டுத்திக்கும் போற்றும் மகாத்மாவைப்
பார்த்தே நடுங்குதிங்கே

வந்தே மாதரமென்னும் பேரொலி
வானைப் பிளக்குது பார் அந்த
மந்திரத்தைக் கேட்டு வெள்ளைப்பேய்
மருண்டே ஓடுதுபார் (வந்)

-காங்கிரஸ் நூற்றாண்டு மலர் (1985)

## 9. தேசபந்து இழப்பு

இந்துநேச வங்கதேச பந்துவை யிழந்தனம்
என்னகாலம் என்று ஓலம் இட்டுமே தளர்ந்தனம் (இந்து)

செந்திருமடந்தை வாழும் தீரசித்த ரஞ்சனன்
சீர்மிகுந்த பாரதத்தாய் திலக நேத்ர அஞ்சனன்

ஈடில்லாத்தங்கம் - எதிரிக்கோர் சிங்கம்
க்ரீடிபோல் அங்கம் - கீர்த்திப் பிரசங்கம்
கேட்டபேர் கண்ணீர் வடிக்க
நாட்டுளோர் மனம் துடிக்க (இந்து)

தொகையறா

ஆயிரத்து எண்ணூற்றி எழுபது நவம்பர்
ஐந்தாஞ் தேதி தன்னில்
அரும்புகழ் மோகனதாஸ் புத்திரராய்
அவதரித்து அரிய கல்வி
நேயமுடனே இருபதாம் வயதினிலே
நேர்ந்ததிரு நாமம் ஓங்க
நிருதர்வளர் சீமையிலே படித்துச்
சட்டமுறை நீதி வாய்ந்த
தூயகுண தாதாபாய் பார்லிமெண்டில் இடம் பெறவே
துணையாய் நின்றார் - மற்றும்
இந்து முஸ்லிம் சோதரரை இகழ்ந்த
ஜான் மக்லீனை எதிர்த்து வென்றார்
தேசமெல்லாம் கொண்டாடும் அரவிந்தர்
வழக்கிலும் வாதாடி வென்றார் மற்றும் பல
தேசபக்தர் வழக்குகளில் தர்ம வக்கீலென
தெய்வம் போலவே உழைத்தார்
அந்த தியாக மூர்த்தி வாழ்வும் போச்சே
அங்கம் வெந்து சாம்பலாச்சே.

# வீரத்தியாகி விஸ்வநாததாஸ் பற்றிய பாக்கள்

## 1. பாவேந்தரின் பாமாலை

கொக்குப்ப றக்குதடி பாப்பா என்று
கொடுத்தஅடி ஆங்கிலனைத் துடிக்க வைத்து
மக்களையும் எழுப்பிற்று விசுவ நாத
தாசென்னும் பாவாணன் வரைந்த பாட்டு!
வைக்கோலைத் தின்னுகின்ற மாடும் அன்னோன்
வாய்ப்பாட்டில் சொக்கிவிடும்; நடிப்பில் வல்லோன்;
தெற்கிலும்ஓர் நடிகமணி இருந்தான் என்று
செப்பிற்று வடநாடும் அந்த நாளில்.

செக்கெல்லாம் சிவலிங்கம் என்னும் காணாச்
சிறுநாய்போல் ஆங்கிலவர் விசுவ நாத
மக்கள்கவிக் குச்சிறையும் தந்தார் ஆனால்
மகிழ்ச்சியுடன் வரவேற்றார் அதையும் தாசர்;
கொக்குப்ப றக்குதடி என்றார் பின்னும்
கொடிக்கப்பல் தோனுதே எனத்தொ டர்ந்தார்.
திக்கற்ற தமிழர்க்கு நாட்டின் அன்பு
சேர்விசுவ நாததாசென் னும்பேர் வாழ்க.

இறந்தநாள் என்னுமொரு பழங்க ணக்கில்
எழுந்ததுதான் இந்நாளின் புதிய வாழ்வு.
மறப்பதும்உண் டோவிசுவ நாதர் பேரை?
மறந்திட்டால் கலையுணர்வு வாழ்வ துண்டோ?
சிறந்திருக்க வேண்டுமெனில் அன்னார் கீர்த்தி
செழித்திருக்க வேண்டுமவர் குடும்பம் நன்றே.
அறம்செய்வோம் செய்நன்றி மறக்க மாட்டோம்
ஆண்டுதொறும் நினைவுவிழா நடக்க வேண்டும்.

-புரட்சிக்கவிஞர் பாரதிதாசன்

## 2. தேசோத்தமத் தியாகனே!

பல்லவி

விண்ணுல கடைந்தனையே விசுவநாதா நீ (விண்)

அனு பல்லவி

மண்ணுல கினைத் துறந்தே சுவர்க்க
வாசல் தனைத் திறந்தே (விண்)

தொகையறா

ஆயிரத்துத் தொளாயிரத்து நாற்பதாம் ஆண்டு
டிசம்பர் அறுதி முப்பத்து ஒன்றில்
ஆனதொரு செவ்வாய்க் கிழமையில் சென்னை
அழகு ராயல் தியேட்டரில்
நேயமிகு வள்ளி திருமண நாடகத்தினில்
நிகரற்ற சுப்பிரமணியன்
நிறை வேடமது பூண்டு தம்கையில் ஒளிமிக்க
நீள்சக்தி வேல் தாங்கியே
சாயல் மிஞ்சிரு நீலமயில் மேலமர்ந்துமே
தாரணி வாழ்வு பொல்லா
சண்டாள மாயவாழ்வென்றுமே ஒரு பாடல்
தமிழிசை முழக்கம் செய்து
ஆயிரமாயிர மக்கள் கண்ணீர் விட்டே கதற
அம்புவியின் வாழ்வை நீத்தாய்
அன்பனே! தேசத்தியாகியே! உனை இந்த
அவனியினில் என்று காண்போம்? (விண்)

பாட்டு

வாழ்விலும் உயர்வடைந்தாய் - அற்புத
மரணமுற்றே சிறந்தாய்
சூழ்பொது நலம் நிறைந்தாய் - இந்தியா
சுதந்திரம் பெற விழைந்தாய் (விண்

தொகையறா

நாட்டின் விடுதலைப் போரில் முன்சென்றுழைத்துமே
நலியாத புகழடைந்தாய்
நாடகம் தன்னிலே தேச ஆவேசம் எழ
நற்பாடல் பல மொழிந்தாய்
கூட்டிலே வரிப்புலி அடைப்பட்ட நிலையிலே
கொடிய ராஜத் துவேசக்
குற்றமது உன்மீது சாட்டவே சிறைவாசம்
கொண்டு பல துன்பமுற்றாய் (விண்)

பாட்டு

தேசோத்தமத் தியாகனே - சோக ரசத்திற்
சிறத்த சங்கீத யூகனே
ஆசை நண்பர்க்கினியனே - செந்தமிழ்க் கவி
ஆறு முகன் மெய்யன்பனே. (விண்)

கலைமாமணி க.ஆ. ஆறுமுகனார்



## 8. விடுதலை வீரன் விஸ்வநாததாஸ்

பல்லவி

மயில்மீது அமர்ந்திருந்த மர்மம் – என்ன?
மாதவனே உன்றன் தர்மம் என்ன?
வேதன் விதித்த ஒரு விருப்பம் என்ன? இந்த
விஸ்வநாத தாசுவைப் படைத்த தென்ன? (மயில்)

சரணங்கள்

பாரதத் தாய் விலங்கு ஒடிப்பதற்கோ - கவி
பாரதியோடு சேர்ந்து படிப்பதற்கோ

வாருதி கடந்து சென்று வருவதற்கோ - அந்த
மாருதி போல் ஒளி பெறுவதற்கோ? (மயில்)

இந்திய மக்கள் இன்பம் பெறுவதற்கோ? - இங்கு
ஏழையே இல்லாமல் செய்வதற்கோ?
திலகரின் தெம்பு வழி சென்றதற்கோ? - இந்தியா
தீமைகள் இல்லாமல் வாழ்வதற்கோ? (மயில்)

அன்னியன் காந்தியை அடித்ததற்கோ? - வெள்ளையன்
ஆணவம் ஒழியவென்று படித்ததற்கோ?
அகிம்சை வழி நடக்க முடித்ததற்கோ? - இந்த
அறுபது கோடி மக்கள் துடித்ததற்கோ? (மயில்)

சோதனை வந்ததென்று சொன்னதற்கோ? - அந்தச்
சுப்பிரமணிய சிவாவோடு நின்றதற்கோ?
வாஞ்சிநாதன் வரவு கண்ட வணக்கத்திற்கோ? -அந்த
வல்லபாய் படேலின் பிணக்கத்திற்கோ? (மயில்)

கதர்கொடி கப்பல்பல காண்பதற்கோ? - அந்தக்
கங்கையோடு காவிரியை இணைப்பதற்கோ?
குமரிக்கடலில் நதி வடிப்பதற்கோ? - இந்தியக்
குடிமகனாய் வந்து படித்ததற்கோ? (மயில்)

மருத்துவர் குலத்துதித்த மாண்பெதற்கோ? - மக்கள்
மங்காத புகழ் நிறைவில் வாழ்வதற்கோ?
சுதந்திரம் கிடைத்ததென்று சொன்னதற்கோ? - இந்தியா
சோகமே இல்லாமல் வாழ்வதற்கோ? (மயில்)

- நெல்கட்டும்செவல் கவிஞர் அ. வெள்ளையப்பன்

## 4. இறவாப்புகழ்க் கலைவள்ளல்

பேரிமயம் தனில்பிறந்து பாரதநா டெங்கும்
பிரவகித்த கங்கையைப்போல் காங்கிரஸ்எனும் ஆறு
ஊர்முழுக்க ஓடிவரத் தொடங்குகிற நேரம்
உதித்தவர்தான் விசுவநாத தாஸ்என்னும் மேலோர்!
யார்எதிர்த்த போதினிலும் நிற்காத தேரை
வடம்பிடித்து மேடைதனில் படம்பிடித்த அறிஞர்!
கூர்முனைசேர் கலைவேலால் பரங்கியரைக் குத்திக்
குருதிபொங்கக் கவிபாடும் பாவலர்கள் தோழன்!

அன்றிருந்த அடக்குமுறை வாய்ப்பூட்டுச் சட்டம்
அவிழ்த்துவிட்ட கொடுங்கோன்மை சவுக்கடியும் சிறையும்
தின்றிருக்க வாய்பிளந்து நின்றிருக்கும் வெள்ளைத்
திமிர்பிடித்த ஆணவத்தை முறியடித்த நடிகர்!
கொன்றுவிடத் துடிக்கின்ற வேட்டுகளை நெஞ்சம்
குளிர்விக்கும் பாட்டாலே எதிர்த்தாரே நடிப்பால்!
அன்றில்களைச் சிறைமீட்டுச் சுதந்திரமாய்ப் பாட
அழைத்துவந்த கலைவள்ளல்! மறக்குதிலை நெஞ்சம்!

பச்சைப்பசுந் தமிழாலே பாஸ்கரனார் தந்த
பாடல்களை அம்பாக்கி மேடைதனில் வீசிக்
கொச்சைமனம், கீழ்மையிலே சுரண்டிவந்த பன்றிக்
கும்பினியார் கும்பல்தனை நடுங்கவைத்த வீரர்!
'நச்சையும்நான் பாகாக விடுதலைக்கே உண்பேன்
நாட்டோரே!' எனநவின்று சிறையிருந்த பறவை!
இச்சையுடன் மயில்மீது தமிழத்தெய்வ மாக
இருக்கின்றான்; இறப்புலகைத் தான்காலில் மிதித்தே!

-திண்டுக்கல் கலைமாமணி பாலகவி வேங்கடாசலன்

## 5. விடுதலைத் தொண்டர் விஸ்வநாததாஸ்

இராகம் நாதநாமகிரியை                                        தாளம்ஆதி

தேசியக்கான மயில் வீரன் - புகழ்
மேவியசத்திய சீலன் - விடுதலை நேசன் (தேசிய)

தன்னலம் கருதாத அன்புயிர்த் தோழன் — நம்
தாயகம் பேணிடும் நற்பணி யாளன்
இந்திய சுதந்திரங்காணத் துடித்தநேர் வாளன் - உயிர்
இழப்பினுங் கொள்கை விடா குண வீர நடிப்பாளன்
(தேசிய)

ஆயிரத்து எண்ணூற்றித் தொண்ணூற்றாறிலே - என்றும்
அருள்நிறை சிவகாசியாம் நற்பதியிலே
தாய்நாட்டின் அடிமைத்தளை அறுக்கவே - தேசத்
தொண்டாற்றப் பிறந்தார் விஸ்வநாததாஸ் (தேசிய)

திண்ணைப் பள்ளியில் சேர்ந்தவர் படித்தார் - மனத்
தெம்புடன் நற்றமிழ் கற்றவர் முடித்தார்
பண்ணிசை ஞானம் பயின்றிடத் துடித்தார் – கலைப்
பணி வளர்க்கவே நாடகம் நடித்தார். (தேசிய)

சுதந்திர வேட்கையை எழுப்பிட உதித்தார் - அவர்
சொல்லைச் செயல் ஆக்கிடத் துதித்தார்
அதர்ம முடியாட்சி கண்டே கொதித்தார் - நாளும்
அயராது விடுதலைச் சொல்லே விதைத்தார் (தேசிய)

உள்ளத்தில் பொங்கிய விடுதலைக் கீதம்
ஓங்கி ஒலித்திட இன்பமாம் நாதம்
துள்ளினால் ஓடுமே சோம்பலும் காதம்
துணிவாக அரசொடு புரிந்தாரே வாதம் (தேசிய)

நாட்டின் விடுதலைக்காக முழங்கினார் பாட்டை - அது
நயவஞ்சம் கொண்ட அரசுக்கோர் சாட்டை
காட்டுமான் போல ஆடவே வேட்டை - தாசைக்
கைதாக்கிச் சிறையிட்டுப் பூட்டினார் பூட்டை (தேசிய)

நெஞ்சை நிமிர்த்தியே சிறைவாசம் சென்றார் - உண்மை
நீதிக்கே கோழைச் செயல்களைக் கொன்றார்
அஞ்சாத வீரனாய்த் துணிவுடன் நின்றார் - குடும்ப
ஆசையைக் கலைப் பணியினால் வென்றார் (தேசிய)

ஆற்றுக்கு அணையிட்டுத் தேக்கலாம் நீரை - தாஸின்
ஆர்வத்துடிப்பை அடக்கித்தடுப்பது யாரு?
கூற்றுவனுக்கு அஞ்சாத கொள்கை வீரனாம் பாரு - அவர்
கொண்ட வீரத்துக்கு நாமென்ன செய்வோம் கைமாறு
(தேசிய)

கலைத் துடிப்பினால் நீதிக்கதைகளை நடித்து - நாளும்
கடமையராய் விடுதலைப் பாடம் படித்து
நிலையிலா வாழ்வைத் தேசத் தொண்டுக்கே கொடுத்து
- நாட்டில்
நேர்மைப் பணிசெய்யும் தலைவரை அடுத்து (தேசிய)

அச்சமின்றித் தீண்டாமை அழிந்திடச் சாடினார் – மூட
அசட்டுக் கொள்கையை மண்ணோடு மூடினார்
பேச்சிலும் மூச்சிலும் சுதந்திரம் நாடினார் - மகாத்மா
பெருமை விளக்கியே புகழ்மாலை சூடினார் (தேசிய)

ஆயிரத்துத் தொளாயிரத்து நாற்பதாம் ஆண்டு - நாடகம்
ஆடவே டிசம்பர் முப்பதில் முருகன் வேடம் பூண்டு
மாயஉலகை நம்பாதே எனப்பாடிக் கொண்டு - இந்த
மண்ணுலகிலாவி துறந்தாரே வாழ்வை விண்டு(தேசிய)

முழங்கிய சங்கொலி நாதம் ஓய்ந்தது எங்கும் - இருள்
மூடிய உலகில் ஒளி எங்கே தங்கும்?
விளக்குத்திரி மூழ்கிட ஒளிதானே மங்கும் - தூண்டும்
விவேகத்தால் ஒளிச்சுடர் எங்குமே பொங்கும் (தேசிய)

நாட்டு நலம்பேணிச் செய்திடுந் தொண்டு - இந்த
நானிலம் அழியினும் குன்றாவளர் பண்டு
ஆடிடும் பம்பரம் சாட்டையைக் கொண்டு – தாசின்
அரும்புகழ் ஓங்கும்பழம்நி தூண்டுதல் கண்டு (தேசிய)

-எஸ். ஆர். சின்னமணி

## 6. செல்வம் இவர்வழி

விசுவ நாததாஸ்
வெற்றி வீரரே - பாடிடும்
பெற்றி தீரரே – நாட்டின்
விடுத லைக்கென
வீறு கொண்டவர் – துன்ப
ஆறு கண்டவர்
இசைவாய் நாடகம்
எடுத்துப் போட்டவர் - நமக்கோர்
எடுத்துக் காட்டவர் - உற்ற
இன்னல் தமையெலாம்
தூசென் றெண்ணினார் - அடிமை
மாசென் றுன்னினார்
வசியும் வளனெலாம்
இழந்தே போயினும் - உயிர்தான்
அழிந்தே மாயினும் - தம்
வாழ்விற் கொண்டநல்
கொள்கை மாறிடார் – இழிந்தே
உய்கை கோரிடார்
திசைகள் யாவுமே
செப்பும் இவர்திறன் - உயர்வால்
ஒப்பும் இவர்செயல் - நாம்
செல்வம் இவர்வழி
தீரம் கூட்டியே - மிக்க
வீரம் காட்டியே

— செம்மை நதிராசா

## 7. வீரத்தியாகி விஸ்வநாததாஸ்

நாமடிமை என்று நமக்கே
தெரியாத அந் நாளில்
வேற்று நாட்டவர்
நம்மை ஆண்ட கதையை
நாடகத் தோடே பாடிப்பாடி
விடுதலை உணர்வும்
வெள்ளையர் எதிர்ப்புணர்வும்
வளர்த்த நாடகக் கலைஞன்

ஆங்கில அரசை அகற்றுதல் வேண்டி
ஆவேசமிக்க பாடல் பல பாடிக்
கூடியிருந்தோர் நெஞ்சம் குமுறப்
பாடிப் பறந்த பாட்டுக் குயில்

வெள்ளை அரசாங்கம்
'பாடாதே' என்று சொல்லும்
பாடல்களைத் தான் பாடுவான்
பாடியதற்குப் பரிசாய்
வாய்த்தது சிறை வாசமும்
அடிக்கடி அவனுக்கு

இருபத்தி ஒன்பது முறை சிறை சென்று
பொன்னான நாடக வாய்ப்புகள் போய்ப்
பொல்லாத வறுமையில் வாடியும்
விடுதலை உணர்வு மட்டும்
விலகவில்லை அவன் நெஞ்சை விட்டு

நாடக மேடை - அவனுக்குத்
தேசியம் வளர்க்கும்
திறந்தவெளிப் பாடசாலை
தேசவிடுதலை - அதிலவன் கற்பித்த பாடம்
தன்வீடு ஏலம் போனாலும்
தாய்நாடு ஏலம் போக விடேனென்று
வீர முரசம் கொட்டிய வீரத்தியாகி.

- வேப்பலோடை மு. செல்லப்பன் எம்.ஏ.,எம்.எட்.,

## 8. நெஞ்சினிக்கும் ... ... ...!

குட்டுவாங்கு தற்கென்றே மோழை யாகி
குனிந்ததலை நிமிராத தமிழர் தம்மில்
சுட்டுவிடும் நெருப்பாகிச் சுருக்கெ டுத்தார்!
சூறையானார்! பறங்கியரின் கொடுக்க றுத்தார்!
வெட்டவெட்ட வளருகின்ற நகத்தைப் போல
மீண்டுமீண்டும் சிறைக்கதவைத் தட்டி நின்ற
பட்டுநிலா விசுவநாத தாசர், சிங்கப்
பாய்ச்சலிலே விடுதலையை நெருங்கச் செய்தார்!

கலையன்னை முதன்மகனின் பாடல் கேட்டு
கடன்வாங்கக் குயில்கூடத் தவங்கி டக்கும்!
அலையலையாய்த் தமிழ்த்தாய்இத் திறனு ணர்ந்து
ஆடவிட்டாள்! பாடவிட்டாள்! நடிக்க விட்டாள்!
தலைமகனாய்ச் சந்தனச்சொல் இசைமு ழக்கில்
தலையாட்டிக் குதியாட்டம் போட வைத்தார்!
உலைகொதித்த நீராகி ஆங்கி லேயர்
உளறல்களைத் தூள்தூளாய் ஊதி நின்றார்!

தமிழ்முருகன் போல்புனைந்து மயிலின் - மீது
தானமர்ந்து ''கொக்குப்ப றக்கு பாப்பா''
அமிழ்தமழைக் குளியலிலே சருகு கூடச்
சிறுத்தையாகப் பாய்ந்துவரும்! தமிழ வாய்கள்
உமிழ்ந்துவிடும் வெள்ளையர் முகச்சேற் றில்!ஓ!
ஊழிக்கூத்தே! விசுவநாத தாச ரென்னும்
சிமிழ்க்கின்ற தேனூற்றே! ஈகி உன்றன்
சிலிர்க்கின்ற வரலாறு நெஞ்சி னிக்கும்!

ஈகி-தியாகி

பாவலர் ஆ. முத்துராமலிங்கம் க.மு., கல்.மு.,
மேனாள் தலைமையாசிரியர், கோவிற்பட்டி.

## கருவி நூற்பட்டி

1. பழம் பெரும் எழுத்தாளர் ரகமி அவர்கள் தினமணி கதிரில் எழுதிய கட்டுரை
2. 1985 ஆம் ஆண்டு தியாகியின் நூற்றாண்டு விழாவை யொட்டி சென்னை சூளை மருத்துவர் சமூக அறக்கட்டளையின் சார்பில் வெளியிட்ட ''நாட்டுணர்வு ஊட்டிய நடிகவேள் தியாகி விஸ்வநாததாஸ்'' என்னும் சிறு நூல்
3. திருவாளர் கா. திரவியம் எழுதிய ''தேசியம் வளர்த்த தமிழ்''
4. தூத்துக்குடியில் தியாகியின் மூத்தமகன் சுப்பிரமணிய தாஸ் மனைவி கண்ணம்மாவுடன் நடத்திய நேர்முகம்.
5. தூத்துக்குடியில் தியாகியின் மூத்த மகள் பிச்சம்மாள், இளைய மகள் தங்கத்தாய் ஆகியோருடன் நடத்திய கலந்துரையாடல்
6. சாத்தூரில் தியாகியின் இளையமகன் திரு முத்தையா தாசுடன் நடத்திய நேர்காணல்
7. திருமங்கலத்தில் தியாகியின் ஏலம் போன வீட்டைப் பார்வையிட்டபின் தோழர் S.P. சந்தானம் அவர்களுடன் நடத்திய செவ்வி (பேட்டி)
8. திரு கே. எஸ். கருப்பையா அவர்களால் வெளியிடப் பெற்ற தேசியக்கவிஞர் மதுர பாஸ்கரதாஸ் நினைவுச் சிறப்புமலர்
9. ''ஜீவா என்றொரு மானிடன்'' ஆசிரியர் பொன்னீலன்
10. பாரதிதாசன் - புகழ் மலர்கள்
11. கவிதைக் கதம்பம் எஸ். ஆர். சின்னமணி

### வேண்டுகோள்

இந்நூலில் இடம் பெறாத செய்திகள், பாட்டுகள் வரலாற்றுண்மைகள் யாரிடமாவது இருப்பின் ஆசிரியர் முகவரிக்கு அனுப்பி உதவினால் அடுத்த பதிப்பில் இடம் பெறும் வழங்கியோர் பெயரும், முகவரியும் நன்றியுடன் குறிக்கப்பெறும்.



## மு. செல்லப்பன், எம். ஏ., எம். எட்.,

பிறந்த ஊர் சிதம்பரனார் மாவட்டம் வேப்பலோடை கிராமம். ஐ. முத்துமாலை வைத்தியர் - மு. கருப்பாயி அம்மாள் எனது பெற்றோர். தூத்துக்குடி வ. உ. சி. கல்லூரிப்பட்டதாரியான நான் தற்போது கோவில்பட்டி அரசு மகளிர் மேனிலைப்பள்ளியில் பட்டதாரி ஆசிரியராகப் பணியாற்றுகிறேன்,

பாரதி தான் எனது ஞானகுரு; வழிகாட்டி. இந்திய மண்ணையும் இதன் விடுதலைக்காக உழைத்த தியாகி களையும் நெஞ்சம் நெகிழ நினைத்துப் பார்ப்பவன் நான். இந்த வகையில் மகாத்மா காந்தியடிகளும், கொடி காத்த குமரனும் செக்கிழுத்த செம்மலும் என் சிந்தை கவர்ந்த முக்கிய தியாக சிலர்கள்.

இலக்கிய ஈடுபாடும் எழுத்து ஆர்வமும் கொண்ட எனது முயற்சியில், இதுவரை இருட்டில் கிடந்த ஒரு வீரத் தமிழனின் தியாக வரலாறு வெளிச்சத்துக்கு வருகிறது புத்தகமாய் ............ உங்கள் கைகளில்

—மு. செல்லப்பன்

---

M. K. Color Process, Madras-600 005 Phone: 841478